# மொதலகல்லு ஸ்ரீஶேஷதாஸர்
## வாழ்க்கை வரலாறு
## மற்றும் அஷ்டகம் (அர்த்தங்களுடன்)

**வெளியிடுவோர்**

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase
Bengaluru : 560078
https://jagannathakesava.blogspot.com
httis://dasa-sahitya.blogspot.com
Ph: 8904458276. haridasa.vijayam@gmail.com

# மொதலகல்லு ஸ்ரீஶேஷதாஸர்
# வாழ்க்கை வரலாறு
# மற்றும் அஷ்டகம் (அர்த்தங்களுடன்)

ஸ்ரீஹரிவாயுகுருகளின் ஆசியுடன்
சிராவண சுத்த த்ருதியை - ஆகஸ்ட் 19,2023
அன்று இபராமபுர ஸ்ரீஅப்பாவரு அவர்களின்
ஆராதனையன்று வெளியிடப்பட்டது

**வெளியிடுவோர்**
ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்
380, 2A Main, 16th Cross, JP Nagar 4th Phase
Bengaluru : 560078
https://jagannathakesava.blogspot.com
httis://dasa-sahitya.blogspot.com
Ph: 8904458276. haridasa.vijayam@gmail.com

**இந்தப் புத்தகத்தை வெளியிட பொருளுதவி செய்த அனைத்து ஹரிபக்தர்களுக்கும் நன்றி!!**

|| ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து ||

**ஸ்ரீகுருப்யோ நம:**

# மொதலகல்லு ஸ்ரீஶேஷதாஸர்
## வாழ்க்கை வரலாறு

**ஸ்ரீஶாங்க்$^4$ரி ஸேவகம் நித்யம் பூ$^4$ஸுராக்$^3$ர குலோத்ப$^4$வம் |**
**வாஸமாத்$^3$ரி ஶிலாக்ஷேத்ரம் ஶேஷதா$^3$ஸ கு$^3$ரும் ப$^4$ஜே ||**

ஆதி ஷிலா க்ஷேத்ரவாஸி ஸ்ரீ **ஶேஷ**தாஸரு
அதே தேவகிதனய ஸ்ரீகிருஷ்ண ஸகனாம்ஶரு
மோததீர்த்தார்யரலி எத்தாகி க்ரந்தகள ஹொத்தரு
வாதீ டீகெ ரசிஸி ஜயதீர்த்தரெனிஸிதரு
ஈ தரெ மேலெ வைகுண்டவாஸரே திம்மண்ணதாஸரு
மாதவ மங்களாங்க ஹரிவிட்டலன பாதஸேவகரு ||

உலகத்தில் தர்மம் குறைந்து, அதர்மமே தாண்டவம் ஆடும்போது, பக்தவத்ஸலனான பகவந்தன், பற்பல ரூபங்களை தரித்து, பூமியில் அவதாரம் செய்கிறான். துஷ்ட மக்களை தண்டித்து, சிஷ்டர்களை காக்கிறான். ஞானத்தின் ஒளியை ஏற்றி, தர்மத்வஜத்தை தாங்கிப் பிடிக்கிறான். 'யதாயதாஹி தர்மஸ்ய க்லானிர்பவதி பாரத | அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம்' என்பது, ஸ்ரீகிருஷ்ணன் பகவத்கீதையில் அர்ஜுனனை காரணமாக வைத்துக் கொண்டு, நமக்கு அளித்த நம்பிக்கை. ஸ்ருஷ்ட்யாதி கர்தனான அவனின் காருண்யம் மற்றும் பக்தவாத்ஸல்யத்திற்கான குறியீடும் இது ஆகும்.

பகவந்தனைப் போல, பாகவதோத்தமரான பகவத் பக்தரும் கூட பகவத் இச்சைப்படி, அவ்வப்போது இந்த பூமியில் அவதாரம் செய்கின்றனர். பூமியில் வெவ்வேறு இடங்களில், பற்பல மடத்து சம்பிரதாயங்களில், பற்பல ஜாதி, உபஜாதிகளில் அவதாரம் செய்கின்றனர். சாமான்ய மக்களிடையே பிறந்து, சாமான்ய மக்களைப் போலவே காட்சியளித்தவாறு,

சாமான்யர்களைப் போலவே ஏழ்மை செல்வம், சுக துக்கங்கள் ஆகியவற்றை அனுபவித்து, வாழ்க்கை முழுவதும் தங்களின் ஸரள ஸ்வபாவம், அபாரமான பகவத் பக்தி மற்றும் அபூர்வமான அந்த:கரணம் ஆகியவற்றின் வெளிபாட்டினால், அஸாமான்யர் என்று சாதனை செய்து கொள்கின்றனர். தம் ஸாதனைகளுடன் மற்ற ஸுஜீவிகளின் ஸாதனைகளுக்கும், ஒரு நல்வழிகாட்டியாக இருக்கின்றனர்.

ஸ்வபாவத: கருணாளுகளான அவர்கள், ஸஜ்ஜனர்கள் படும் கஷ்டங்களுக்கு துக்கப்படுகின்ரனர். உலக நலனுக்காக, தம்மை தாம், சந்தனத்தைப் போல இழைத்துக் கொள்கிறார்கள். அதனை தெய்வ சிரத்தையின் பரிமளத்துடன் அனைவருக்கும் பகிர்ந்து கொடுக்கின்றனர். எந்தவிதமான ஆடம்பரம், படாடோபம் ஆகியவை இல்லாமல், ஒரு சாதாரண வாழ்க்கையை நடத்தி, வழி தவறியவர்களுக்கு ஒரு கைவிளக்கினைப் போல இருக்கின்றனர். தம்மை அடைந்த ஸுசேதனங்களின் துக்கத்தைப் போக்குவதற்கு, தம் தபோ பலத்தினால், அஸாமான்ய எனப்படும் மகிமைகளை காட்டுகின்றனர். நேரத்தை என்றைக்கும் வீண் அடிக்காமல், தம் வாழ்க்கையின் ஒவ்வொரு நொடியையும்கூட பகவத் சிந்தனையில், ஸார்த்தகமாக கழித்து ‘ஈ ஜனும தப்பித மேலெ யாவ ஸாதனெயு நிஸ்சயவில்ல; விஜயவிட்டல பல்ல’ என்னும் ஸ்ரீவிஜயதாஸரின் வசனத்திற்கேற்ப, பகவத் தத்தமான ஸாதன ஷரீரத்தை, லோக கல்யாணத்திற்காக, தம் அவதார கார்யத்தின் ஸாதனைக்கு பயன்படுத்திக் கொள்கின்றனர். தேகத்தை விட்டபிறகும் கூட, ஸச்சேதனங்களின் சிந்தனைகளால், மறையாத புகழுடன், ஸாத்விக ஜீவிகளின் ஸ்பூர்த்தியை வளர்ப்பவராக, நம்பி வந்தவர்களுக்கு கண்ணுக்குத் தெரியாத சக்தியாக அந்தரங்கத்தில் நிற்கின்றனர்.

இவ்வாறு பரமாத்மனின் சங்கல்பத்திற்கேற்ப, ஸுஜீவிகளை உத்தாரம் செய்யும் அற்புதமான நோக்கத்துடன் அவதரித்த

தேவதா புருஷர் – மொதலகல்லு ஸ்ரீஶேஷ தாஸர். கர்னாடகத்தின் சிறந்த பக்தி மார்க்கம் எனப்படுவதான ஹரிதாஸ ஸாகித்ய பரம்பரையின் இரண்டாம் கட்டத்தின் தலைவர் எனப்படும் ஸ்ரீவிஜயதாஸரின் கருணைக்கு பாத்திரர் ஆகி, அவருடைய ஸ்வப்ன-குறிப்பிற்கேற்ப 'குருவிஜய விட்டலா' என்னும் ஷுப நாமாங்கிதத்தில் அற்புதமான கிருதி, கீர்த்தனைகளை இயற்றி, தாஸ ஸாகித்யத்தை ஒளிர்வித்தவரான ஹரிதாஸ ஸ்ரேஷ்டர் இவர்.

ஹரிகுருகளின் பரமானுக்கிரகத்தினால், இவர் அஸாமான்ய ஸாதனைகளை செய்து, தாம் ஸித்தி அடைந்ததோடு மட்டுமல்லாமல், தம்மை நம்பிய எண்ணற்ற ஸுஜீவிகளுக்கு நல்வழிகாட்டியாக ஆகி, அவருடைய வாழ்க்கையை முன்னேற்றிய மகாத்மர். ஹரிதாஸ பரம்பரையில் புகழ்பெற்றவர்களான, ஸ்ரீவிஜயதாஸர், ஸ்ரீகோபாலதாஸர், ஸ்ரீஜகன்னாத தாஸர் போன்ற அபரோக்ஷ ஞானிகளின் வரிசையில், பூஜிக்கத்தக்க ஸ்தானத்தில் மொதலகல்லு ஸ்ரீ ஶேஷதாஸரும்கூட வீற்றிருக்கிறார்.

## அர்ஜுன அம்ச ஸம்பூதர்

ஹரிபக்தர்களுக்கு பகவந்தனை அடையும் வழியை காட்டியவரான ஸ்ரீஶேஷதாஸர், அர்ஜுன அம்ச ஸம்பூதர் என்று அவரது எண்ணிக்கையற்ற பக்தர்கள் நம்பிக்கை கொண்டிருக்கின்றனர். இதற்கு ஆதாரமாக பற்பல கீர்த்தனைகள் இயற்றப்பட்டிருந்தாலும், சாட்சாத் ஸ்ரீஶேஷ தாஸரின் கிருதிகளிலேயே இப்படியான வசனங்களை நாம் பார்க்கிறோம்.

பார்த்தி$^{2}$வவருஷதி$^{3}$ பார்த்த$^{2}$ஸாரதி$^{2}$ ப$^{4}$வ்ய
மூர்த்திய முத$^{3}$தி$^{3}$ ஸ்தா$^{2}$பிஸி கோலெ |
மூர்த்திய முத$^{3}$தி$^{3}$ ஸ்தா$^{2}$பிஸித$^{3}$ந்த$^{2}$ பூர்வ
பார்த்தா$^{2}$ஹிபார்யர ப்ரார்த்தி$^{2}$பெ கோலெ ||

என்னும் குறிப்பு, மானவியின் ஸ்ரீ ஶ்யாம ஸுந்தர தாஸர் இயற்றிய, ஹரிதாஸர்களின் ஸ்தோத்ர ரூபகமான கோலு ஹாடு' வில் வருகிறது. பார்த்திவ நாம ஸம்வத்ஸரத்தில் பார்த்தஸாரதியின் திவ்ய விக்ரகத்தை, 'பூர்வ பார்த்தாஹி பார்யர்' முற்பிறவியில் பார்த்தராக இருந்து அஹிபார்யர் – ஸ்ரீ ஶேஷதாஸர், தம் பிறந்த ஊரில் பிரதிஷ்டை செய்தார் என்னும் கருத்து இங்கு தெளிவாகிறது.

கொப்பர ஸ்ரீநரஸிம்ஹ ஸ்வாமியின் அர்ச்சகராக இருந்த ஸ்ரீகிரியாசார்யர், ஶேஷதாஸரைக் குறித்து இயற்றிய 'ஶேஷதாஸவர்ய போஷிஸெம்மனு' என்னும் கீர்த்தனையில்:

தே³ஶதே³ஶக³ளலி ப⁴ஜிப தா³ஸஜனர மனத³ அபி⁴ |
லாஶெக³ளனு ஸலிஸுதலி ஸுரேஶனந்தெ மெரெத³ ஶேஷ ||

என்று, ஸ்ரீதாஸர், இந்திரனான அர்ஜுனன் என்னும் சிந்தனையை சொல்லியிருக்கிறார்.. அடுத்து, குடெபல்லூர் ஸ்ரீராகவேந்த்ராசார்யர் 'ஶேஷதாஸர பாடிரோ' என்னும் கீர்த்தனையில்:

து³ர்ஜய ப⁴வவனு தர்ஜிஸி தோ³ஷவி |
வர்ஜிதனனு தோர்வ அர்ஜுனாம்ஶஜர ||

என்று தாஸர் அர்ஜுன அம்ச ஸம்பூதர் என்பதை நேரடியாக சொல்லியிருக்கிறார்.

பாவனர்ஜுனம்ஶ தா³ஸரிகொ³லித³ க்²யாதா |
கோவித³ன்ன மாடி³ பு⁴விலி மெரெஸிதா³தா ||

என்று, ஸ்ரீஶ்யாம ஸுந்தர தாஸரின் சிஷ்யரான மந்த்ராலயத்தின் லகுமீஷ என்னும் அங்கிதத்தைக் கொண்டவரான தாஸர் 'ஸ்ரீசிந்தரேவலியொள்ளிந்த

ஸ்ரீஹனுமந்தா’ என்னும் கீர்த்தனையில் மேலும் இந்த விஷயத்தை தெளிவுபடுத்தியிருக்கிறார்.

மேலும், ஶேஷதாஸர் இயற்றியிருக்கும் பல்வேறு ஸுளாதிகளில், தாஸர் அர்ஜுனாம்ஷர் என்னும் கருத்து பல இடங்களில் கிடைக்கிறது. தாமே முன்னர், ஜன்மாந்தரங்களில், ஷசிபதியாக இருந்து, அதிகார மதத்தினால் சாபத்தை பெற்றதையும், வாலியாக ஸ்ரீராமனால் கொல்லப்பட்டதையும், பாண்டவர்களின் மத்யமனாக, ஸ்ரீகிருஷ்ணனின் நட்பினை பெற்றதையும், வ்ருஷப ரூபத்தினால், ஸ்ரீமத்வ பாஷ்யத்தை கேட்டதையும், டீகாக்ருத்பாதராகி விமலஞானத்தின் அமிர்தத்தை நமக்கு அளித்த ரகசியத்தையும், சில இடங்களில் குறிப்பாகவும் மேலும் சில இடங்களில் தெளிவாகவும் கூறியிருக்கிறார்.

பித்ரு ஸமான சேஷ்டனெந்தெம்ப$^{3}$ வித$^{4}$தி$^{3}$ந்த$^{3}$
பித்ரு நிஷ்டவாத$^{3}$ கருணதி$^{3}$ந்த$^{3}$
அதிஶயவாகி$^{3}$ என்ன பாலன மாட$^{3}$தி$^{3}$ரெ |
பித்ரு ஸமான ஜேஷ்ட நெம்போ$^{3}$க்திகெ வ்யா
ஹதி பா$^{3}$ரதே$^{3}$னோ ஶுப$^{4}$கா$^{3}$த்ர ஜக$^{3}$த$^{3}$ ஸூத்ர
மதி ப்ரதா$^{3}$த்ருனெனிப பவனராயா ||

என்று துவங்குவதான, வாயுதேவரின் மஹிமா ஸுளாதியில், ஒவ்வொரு வரியிலும் ‘ப்ராத்ருநிஷ்டெ’ யே வந்திருக்கிறது. இதே ஸுளாதியில் வரும்:

விஜயவ நீவெனெந்து$^{3}$ த்$^{3}$வஜதல்லி நீனிந்து$^{3}$
குஜனர ஹ்ருத$^{3}$யவன்னு நிர்பி$^{4}$ன்னகெ$^{3}$யிஸி அந்து$^{3}$
விஜயவ பாலிஸித்து$^{3}$ ஆஶ்சர்யவல்ல ஈக$^{3}$..
என்னும் ஆதி தாளத்தின் நுடி

ப்ரத்யக்ஷவாத$^{3}$ ம்ருத்யு மனெயிந்த$^{3}$ பாலிஸித்து$^{3}$
கீர்த்தி ஆதி$^{4}$க்யவல்ல கு$^{3}$ணநிதி$^{4}$யே

என்னும் த்விடி தாளத்தின் நுடி மற்றும்

என்னண்ணன க்ருபெ இன்னு எனகில்லதுதரிந்த என்பதான வாயுதேவரைக் குறித்தான இன்னொரு ஸுளாதியில்:

அண்ணன க்ருபெயிந்த$^3$ விஜயவுள்ளவனாகி$^3$
ஜக$^3$தொ$^3$ளகெ$^3$ ஸ்ரேஷ்டனெந்தெ$^3$னிஸி மெரெதெ$^3$
அண்ணன க்ருபெயிந்த$^3$ ப$^3$லுவித$^4$வாத$^3$ந்த
க$^4$ன்ன பா$^4$க்$^3$யோத$^3$யவாயிது ப$^3$லுபரி ||
அண்ணன க்ருபெயிந்த$^3$ ஞான ப$^3$லவு
அண்ணன க்ருபெயிந்த ஸ்ருதிததிக3கோ$^3$சர
அனந்த மஹிமன ஆப்த நெனெஸிகொண்டெ$^3$
அண்ணன க்ருபெயன்னு ஜரித$^3$ காரணதி3ந்த$^3$
என்னனீபரி மாடி$^3$ ப$^3$ளலிஸுவி தூ$^4$ரியெ
க$^4$ன்ன த$^3$யாநிதெ$^4$ கு$^3$ருவிஜயவிட்டலரேயா ந
ம்மண்ணன ப$^3$லவின்னு எனகெ$^3$ முக்$^2$ய ஸதத ||

என்னும் அட்ட தாளத்தின் வாக்கியங்கள், தாஸர் முற் பிறவிகளில் பீமானுஜராக இருந்தார் என்பதை தெளிவு படுத்துகிறது. அடுத்து, 'ஹிதமாள்ப ஜனகனாகி ரக்ஷிஸு எந்தெம்பெனெ' என்னும் ஸுளாதியில், ஸ்ரீதாஸர் :

நின்ன கருணாபேக்ஷ மாட$^3$த$^3$லெ ஒந்து$^3$
ஜனும ஹரி கருணவில்லத$^3$லெ களதெ$^3$
அனந்தரதி$^3$ என்ன புண்ய ஸாஸிரதி$^3$ந்த$^3$
அனுஜனாதெ$^3$ நின்ன க்ருபெயிந்த$^3$லி ..

தாம் த்ரேதாயுகத்தில் வாலியாக இருந்ததையும், மறுபடி த்வாபர யுகத்தில் அர்ஜுனனாக ஹரிவாயுகளின் க்ருபைக்கு பாத்திரராக இருந்ததையும் வர்ணிக்கிறார்.

அந்து ஶரதல்பதல்லி மலகி$^3$ஸித$^3$த$^3$ரிந்த$^3$
இந்து$^3$ து$^3$க்க$^2$த$^3$ ஶய்யா லொரகி$^3$ஸிதி$^3$யா |

அந்து$^{3}$ ஶஸ்த்ராஸ்த்ரதி$^{3}$ந்த$^{3}$ நொந்தி$^{3}$ஸித$^{3}$த$^{3}$ரிந்த$^{3}$
இந்து$^{3}$ நுடி$^{3}$ அம்பி$^{3}$லெசிஸிதி$^{3}$யா ||

என்றும், மேலும் இதே ஸுளாதியில் வரும்

மமகாரதி$^{3}$ந்த$^{3}$லெ அம்ஶிகெ பி$^{4}$ன்னனாதெ$^{3}$
மமகாரதி$^{3}$ந்த$^{3}$லெ அம்ஶக்கெ பி$^{4}$ன்னனாதெ$^{3}$
மமகாரதி$^{3}$ந்த$^{3}$லெ பத$^{3}$விகெ$^{3}$ தூ$^{3}$ரனாதே$^{3}$

என்னும் வாக்கியங்களால் தனது ஜென்ம ரகசியங்களை தெளிவுபடுத்துகிறார்.

ஶேஷதாஸர் இயற்றியிருக்கும் உகாபோகங்களிலும்கூட அவருடைய பூர்வ அவதாரங்களின் விவரங்களை சொல்லியிருக்கிறார்.

விஜய நாமவு எனகெ$^{3}$ ஸார்த்த$^{2}$க மாள்பதி$^{3}$ந்து$^{3}$
குஜனமர்த்த$^{4}$ன நினகெ$^{3}$ நீனே ஒலிது$^{3}$ |
விஜயஸாரதி$^{2}$ எனிஸி என்னல்லி நில்லதி$^{3}$ரெ
விஜய நாமவு ஸப$^{2}$லவாகு$^{3}$வதே$^{3}$..

என்னும் உகாபோக மற்றும்

'சக்தி ஆயுததிந்த ஸலஹிதெனெம்போ கனதெ'
'மூருவரகளனு மோததல்லித்து'
'அந்தின குருத்ரோஹதிந்த ஈ கும்பிணிகெ'
என்று தொடங்கும் உகாபோகங்கள், ஶ்ரீதாஸர் நராம்ஷர் என்பதை தெளிவுபடுத்துகிறது.

## ஶ்ரீதாஸரின் மகிமைகள்

மொதலகல்லு ஶ்ரீஶேஷதாஸர், அவருடைய பெயரே சொல்வதைப் போல, மொதலகல்லு என்னும் இடத்தை

சேர்ந்தவர். தாஸர் தம் வாழ்க்கையின் பிற்பாதியில் ஶ்ரீனிவாஸனை வணங்கியவாறு, தம் வீட்டிற்கு வரும் அதிதி அப்யாகதர்களுக்கு நிரந்தர அன்னதானத்தை செய்தவாறு, மொதலகல்லிலேயே நிலைத்திருந்தார். தாஸ உலகிற்கு மைல்கல்லைப் போல ஒளிர்வதான, குருவிஜய விட்டலாங்கித கிருதி வரிசைகள் அனைத்தும் வெளிப்பட்டதுகூட இதே மொதலகல்லில்தான். ஆகவே ஶ்ரீதாஸரின் பெயரிலேயே 'மொதலகல்லு' சேர்ந்துவிட்டது.

108 திருப்பதி க்ஷேத்திரங்களில் முதன்மையானது மொதலகல்லு. கிருஷ்ணை மற்றும் துங்கபத்ரா என இரு நதிகளுக்கு இடையே இருக்கிறது இந்த க்ஷேத்திரம். இந்த க்ஷேத்திரத்திற்கு ஆதிஷிலெ, கிரிஷாசல, ருத்ராசல, ஷம்புகிரி என்னும் பல பெயர்கள் புராணங்களில் காணப்படுகின்றன. ஶ்ரீருத்ரதேவரின் தவத்திற்கு மெச்சி, ஶ்ரீனிவாஸன் அவருக்கு தரிசனம் அளித்து, பின் சிலையாக நின்ற இடம் இது என்று சொல்லப்படுகிறது. மொதலகல்லினைப் பற்றிய விளக்கமான கதை பிரம்மாண்ட புராணத்தில் நான்கு அத்தியாயங்களில் இருக்கிறது.

## ஶ்ரீதாஸரின் வாழ்க்கை வரலாறு

இத்தகைய பௌராணிக பின்னணியைக் க்கொண்ட மொதலகல்லு க்ஷேத்திரம், ஶ்ரீஶேஷதாஸரின் ஸாதன பூமியானாலும், அவர் பிறந்தது மொதலகல்லில் அல்ல. இன்றைய கத்வாலுக்கு சுமார் 8 மைல் தூரத்தில் இருக்கும் தரூரு என்னும் கிராமத்தில். தரூரில், தம் வீட்டில், ஶ்ரீதாஸர் தம்முடைய இஷ்ட தெய்வமான ஶ்ரீபார்த்தஸாரதியின் ஷிலா பிரதிமையை நிறுவியிருக்கிறார். லௌகிகத்தில் வைராக்கியம் பெற்று, கடினமான சேவையினால் அவர் மாருதிராயரின் தரிசனம் பெற்றது, கிருஷ்ணா தீரத்தில் வரும் சிந்தரவேலி என்னும் இடத்தில். சிந்தரவேயிலில் ஶ்ரீவ்யாஸராஜரால் பிரதிஷ்டை செய்யப்பட்டதான முக்யபிராண தேவரின்

சன்னிதானம் இருக்கிறது. இவ்வாறாக இந்த தரூரு, சிந்தரவேலி மற்றும் மொதலகல்லு என்னும் இந்த தாஸரின் மூன்று இருப்பிடங்களையும், அவருடைய பக்தர்கள், த்ரிதாமங்களைப் போலவே கருதுகின்றனர். இந்த மூன்று ஊர்களின் பெயரிலேயே ஸ்ரீதாஸரை, தரூரு தாஸர், சிந்தரவேலி தாஸர் மற்றும் மொதலகல்லு தாஸர் என்று அழைக்கும் வாடிக்கையும் இருக்கிறது.

ஸ்ரீமேஷதாஸரின் வாழ்க்கை வரலாறு மிகவும் அற்புதமானது, புண்யகரமானதும் ஆகும். தாஸரின் வாழ்க்கை, ஸாதனைகளைக் குறித்தே இயற்றப்பட்ட கிருதிகள், ஆவணங்கள், தகவல்கள் என்று பல கிடைத்துள்ளன. ஷ்யாமஸுந்தர, கமலாபதி விட்டலா, கார்ப்பர நரஸிம்ஹ, தந்தெ ஸ்ரீ நரஸிம்ஹ, நரஹரி விட்டலா, பீமேஷ கிருஷ்ண, ஜகஜனுமாதி காரண விட்டலா, பார்த்தஸாரதி விட்டலா, ஸ்ரீஷ வெங்கடாதீஷ, ஸ்ரீகர விட்டலா, ஸ்ரீஷ கோபாலவிட்டலா, லகுமீஷ, ஸிரி தந்தெ ஸ்ரீனிவாஸ – ஆகிய பல முத்ரிகைகளில் இயற்றப்பட்டுள்ள பதங்கள் ஸ்ரீதாஸரின் மகிமைகளை, அற்புதங்களை வெளிப்படுத்துவதில் மற்றும் ஸ்ரீதாஸரின் வாழ்க்கையில் நடந்த சம்பவங்களை விளக்குவதில் மிகவும் முக்கியமாக இருக்கின்றன.

ஸ்ரீமேஷதாஸரின் சமகாலத்தவர் என்றே அறியப்படுபவரான, டங்கஸாலெ ஸ்ரீனிவாஸாசார்யர் என்பவர் (அடுத்து இவரே கூடலி அக்ஷோப்ய தீர்த்தரின் பீடத்தில் வந்தவரான ஸ்ரீஸ்ரீரகுதாந்த தீர்த்தர்) சமஸ்கிருதத்தில் இயற்றியிருக்கும் அபூர்வமான அஷ்டகம் ஒன்று கிடைத்துள்ளது. ஸ்ரீமேஷதாஸர் நிர்யாணம் அடைந்த ஆண்டு 1885 பார்த்திவ சம்வத்ஸரம். இந்த அஷ்டகம் உருவானதும்கூட ஒரு சுவாரஸ்யமான விஷயமே ஆகியிருக்கிறது. மந்த்ராலய பிரபுகளான ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள், மேஷதாஸருக்கு செய்த பரமானுக்கிரகத்தின் பலனாகவே இந்த அஷ்டகம் இருக்கிறது.

ஷேஷதாஸர் குருராஜரிடம் செய்த பக்தி மற்றும் ராயரின் சிஷ்ய வாத்ஸல்யத்தையும் இந்த அஷ்டகம் விளக்குகிறது.

டங்கஸாலெ ஸ்ரீனிவாஸாசார்யர் ஸ்ரீயலமேலி விட்டலா சார்யரின் வித்யா சிஷ்யர் ஆவார். அந்த சமயத்தில் இருந்த பண்டிதர்களில், விட்டலாசார்யருக்கு ஒரு விசேஷமான ஸ்தானம் இருந்தது. குருராஜரின் ஏகாந்த பக்தரான ஆசார்யர், ஒவ்வொரு ஆண்டும் ஸ்ராவண மாதமும் தம் சிஷ்யர்களுடன் மந்த்ராலய க்ஷேத்திரத்திற்குச் சென்று, அங்கு குருராயரின் ஆராதனையில் பங்கு பெற்று, குருசேவை செய்தவாறு, ஒரு மாத காலம் ஸ்ரீக்ஷேத்திரத்தில் தங்கும் வழக்கம் வைத்துக் கொண்டிருந்தார்.

ஆண்டு 1885ம் ஆண்டில், ஸ்ரீராயரின் ஆராதனை சமயத்தில் பங்கு பெற மந்திராலயத்திற்கு சென்றிருந்தபோது, அவருடைய வித்யா சிஷ்யரான சுமார் 20 ஆண்டு வாலிபனான ஸ்ரீனிவாஸாசார்யரும் குருகளுடன் இருந்தார். அதே ஆண்டில் வைசாக சுத்த அஷ்டமியன்று, ஸ்ரீஷேஷதாஸர், மொதலகல்லில் வைகுண்ட யாத்திரை செய்திருந்தார். அந்த சமயத்தில் முத்துபீமாசார்யர் என்னும் ராயரின் அந்தரங்க பக்தர் ஒருவர் மந்திராலயத்தில் சேவை செய்து கொண்டிருந்தார். அவருக்கு ஒரு நாள் கனவில் ஸ்ரீராயர் தரிசனம் அளித்து, டங்கஸாலெ ஸ்ரீனிவாஸார்யர் மூலமாக, ஷேஷதாஸரைக் குறித்தான ஒரு அஷ்டகத்தை இயற்றச் செய் -- என்று குறிப்பிட்டார்.

இந்த விஷயத்தை முத்துபீமாசார்யர், அங்கு வந்திருந்த ஸ்ரீனிவாஸாசார்யரிடம் தெரிவித்தார். ஆனால், வயதில் மிக இளையவரான ஸ்ரீனிவாஸாசார்யர், மிகவும் மூத்தவரான மற்றும் ஞானிவரேண்யரான ஷேஷதாஸரின் ஸ்தோத்திரத்தை இயற்ற தயங்கினார். ஆனால், அவரது குருகளான யலமேலி விட்டலாசார்யர் 'ராயரின் ஆணைப்படி இதனை செய்வாயாக. அவரே உன்னில் நின்று இதனை இயற்றச் செய்கிறார்' என்று

சிஷ்யருக்கு தைரியம் அளித்ததால், டங்கஸாலெ ஸ்ரீனிவாஸாசர்யர் இதனை இயற்ற முன்வந்தார்.

ஸீதாபதிம் – என்று துவங்கும் அஷ்டகத்தை இயற்றினார். ஸேஷதாஸரின் மகிமை பெருமைகளை அற்புதமாக விளக்கக்கூடிய அந்த அஷ்டகத்தின் வரிகளையும், அதன் மேன்மைகளையும் பார்த்து 'இதனை ஸ்ரீராயரே இயற்றியிருக்கிறார்' என்று குருசிஷ்யர்கள் இருவரும் நினைத்தனர். பிறகு, குருராஜரின் ஆணைப்படி, அதனை அர்ச்சகரின் மூலம் ராயரின் மூலபிருந்தாவனத்தின் மேல் வைத்து, ஒரு வாரம் பூஜைகளை செய்தனர். பின்னர், அதனை பல்வேறு பிரதிகளை எடுத்து, குருராஜரின் பக்தர்களுக்கு அளித்தனர். ஸேஷதாஸரின் வாழ்க்கை சரிதத்தில் வரும் முக்கிய சம்பவங்களை மற்றும் ஸ்ரீதாஸரின் மேல் இருந்த ஹரிவாயு குருகளின் காருண்யம் ஆகியவற்றை இந்த அபூர்வமான அஷ்டகத்தில் நாம் பார்க்கலாம்.

## ராயரின் கிருபா கடாக்ஷம்

ஸ்ரீஸேஷதாஸரின் வாழ்க்கையில் மந்திராலய பிரபுகளான ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் வகித்த பாத்திரமும்கூட குறிப்பிட வேண்டியதாகும். மொதலகல்லு கிராமம், மந்திராலய க்ஷேத்திரத்திற்கு அருகில் இருந்ததாலேயே, ஸ்ரீதாஸர் தம் சிறிய வயதிலிருந்தே ஸ்ரீராயரின் தரிசனத்திற்காக, மந்திராலயம் வருவதை வழக்கமாக ஆக்கிக் கொண்டிருந்தார். அவருக்கு லௌகிகத்தில் வைராக்கியம் நிறைந்திருந்ததால், சுமார் ஒரு ஆண்டு காலம், மந்திராலயத்திலேயே ஒரு முறை வசித்தார். மந்திராலயத்தின் அருகிலேயே இருக்கும் 'ஸ்ரீராகவேந்திர சித்தக்ஞ' என்று புகழ்பெற்றவரான இபராமபுரத்தின் ஸித்தபுருஷரான ஸ்ரீகிருஷ்ணசார்யருடன் தாஸருக்கு ஒரு அழகான நட்பு இருந்தது. ஆகவே, மந்திராலய்த்திற்கு வந்தபோதெல்லாம், தவறாமல் ஸ்ரீதாஸர் இபராமபுரத்திற்கும் சென்று வந்து கொண்டிருந்தார்.

ஸ்ரீராயரின் பிருந்தாவன தரிசனத்தால் மட்டுமே, ஷேஷதாஸர் மெய்மறக்கும் நிலையை அடைந்திருந்தார். இதற்கு அவர் முன்னர் அர்ஜுனனாக இருந்தபோது, ஒரு முறை அந்த இடத்தில் அணுஸால்வனுடன் போர் புரிந்த சந்தர்ப்பம் அவருக்கு நினைவுக்கு வந்திருக்கக்கூடும். அந்த யுத்தத்தில் சாட்சாத் ஸ்ரீகிருஷ்ணனே ஸாரதியாக இருந்தாலும், வீராதி வீரனான அர்ஜுனனால், அணுஸால்வனை வெல்ல முடியாமல் போனது. ஏனெனில், முன்னர் பிரகலாத ராஜர் நிர்மாணம் செய்த யக்ஞ குண்டம் இருந்த, அதாவது, ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் மூலபிருந்தாவனம் நிர்மாணம் செய்த இடத்தில் அணுஸால்வன் நின்றிருந்தான். இதனை அறிந்த ஸ்ரீகிருஷ்ணன், தனது ரதத்தினை சிறிது பின்னே நகர்த்தினான். அப்போது அணுஸால்வனும், தனது ரதத்தினை முன்னே கொண்டு வர வேண்டியதாயிற்று. பவித்ரமான அந்த இடத்தை விட்டு, அணுஸால்வன் முன்னர் வந்தபின், அர்ஜுனன், அவனை சுலபமாக வென்றான்.

இந்த ரகசியத்தை அறிந்திருந்த ஷேஷதாஸருக்கு பிரகலாத அம்ச ஸம்பூதரான ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் நிலைத் திருக்கும் மந்திராலயமானது இருப்பிடமாகவே ஆகிப் போனது. இந்த அனைத்து விஷயங்களையும் ஸ்ரீதாஸர், தாம் இயற்றியுள்ள – 'குருவாரத ஸுளாதி' என்றே பெயர் பெற்ற 'கன தயாநிதியாத குருராகவேந்திர நிம்ம | வனஜ பாதயுகக்கெ நமோ நமோ' என்னும் அபூர்வ ஸுளாதியில் வர்ணித்திருக்கிறார். குருராஜனே தமக்கு கனவில் வந்து தரிசனம் அளித்து, நல்வழி காட்டியதை 'நினகே நீனே பந்து ஸ்வப்னதலி.. ஸந்தர்ஷனவித்தே' என்று தெளிவாக சொல்லி யிருக்கிறார். ஸனகாதி முனிவர்களின் மனனத்திற்கும் சிக்காத, கோடி சூர்யர்களின் ஒளியைக் கொண்ட, வேதேஷனான ஸ்ரீஹரியை மற்றும் பவன அவதாரரான மோதமுனிகளை காட்டி பரமானுக்கிரகம் காட்டிய ஸ்ரீராயரின் காருண்யத்தை தழுதழுத்த குரலில் கொண்டாடியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

குருகண பரிபூர்ண குருவிஜயவிட்டலா நிம்ம
கனவாத பலதி எனகெ ஸுளித நிந்து
என்று பக்தி மரியாதையுடன் திரும்பத்திரும்ப பகவந்தனை நினைக்கிறார்.

"கலியுகத்தில் கலியின் பாதிப்பில் சிக்கி துன்பப்படுபவர் களுக்கு, த்ரிவித தாபங்களின் பாதையினால் கஷ்டப்படுபவர் களுக்கு, மலத்துடன் கூடியதான பவ சாகரத்தினை தாண்ட முடியாமல் மூழ்கியிருப்பவர்களுக்கு, வழிகாட்டியாக, துங்க பத்ரா தீரத்தில் இந்த பவித்ர க்ஷேத்திரத்தில் குரு ராகவேந்திரர், அற்புதமான ரூபத்தினால் நிலைத்திருக்கிறார். குருராஜரின் பரிசுத்த பக்திக்கு வசமாகி, ஸ்ரீஹரி தன் பரிவார சமேதனாகி, ராயரின் பிருந்தாவனத்தில் நிலைத்திருக்கிறான். நம்பி வந்த பக்தர்களையும், தானே அருளி, அதன் புகழினை, குருராஜருக்கு கொடுக்கிறான்' என்று கூறுகிறார் ஸ்ரீதாஸர்.

'குருகுல திலகரும், ஸுர கல்பதருவைப் போல பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றுபவரான, குருவிஜயவிட்டல ப்ரியரான' ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள், தாஸரின் மகிமைகளை, அற்புதங்களை வர்ணிக்கும் அஷ்டகத்தின் ரசனைக்கு ப்ரேரணை செய்து, இயற்றச் செய்து, பின்னர் அதனை தன்னுடைய பிருந்தாவனத்தின் மேலேயே வைத்துக் கொண்ட சம்பங்களே, ஸ்ரீதாஸர் ராயரில் இத்தகைய மிகவும் உச்சமான பக்தி மற்றும் தீக்ஷையை கொண்டிருப்பதற்கு சாட்சியாக இருக்கின்றன என்று சொல்லலாம்.

## அற்புத வாழ்க்கை

ஶேஷதாஸரின் அவதார காலம் 19ம் நூற்றாண்டின் துவக்கக் காலம். ஸுரபுர ஆனந்ததாஸர், யளமேலி ஹயக்ரீவாசார்யர், இபராமபுர ஸ்ரீஅப்பாவரு, தொட்டபள்ளாபுர ஸ்ரீமுத்துமோகன விட்டலதாஸர், ஹரபனஹள்ளி பீமவ்வா, கௌதாள ஸ்ரீகுருஜகன்னாத தாஸர் ஆகியோர், ஶேஷதாஸரின்

சமகாலத்தவர்கள். ஶேஷதாஸர் பிறந்தது ஆண்டு 1817. ஷாலி வாஹன ஷக 1739 ஈஸ்வர நாம ஸம்வத்ஸர கார்த்திக சுத்த த்வாதசியின் புண்ய தினம். இயற்பெயர் ஶேஷப்பா. தாஸரின் சிறு வயது சம்பவங்கள் எதுவும் சரியாக தெரியவில்லை என்றாலும், யஜுஷ்ஷாகை, பாரத்வாஜ கோத்திரம், திம்மண்ணய்ய அவர்களின் வம்சத்தின் மூலபுருஷர் என்னும் குறிப்பு இருக்கிறது. சில இடங்களில், தாஸரின் தந்தையின் பெயரும் திம்மண்ணா என்றே சொல்லப்பட்டுள்ளது. ஶேஷதாஸருக்கு சிறு வயதிலிருந்தே மிகச்சிறந்த கல்வியும், சம்ஸ்காரங்களும் கிடைத்திருக்கின்றன என்றே தோன்றுகிறது.

அன்றைய கால பத்ததிக்கேற்ப, ஶேஷப்பா அவருக்கு சிறு வயதிலேயே ஸூப்பம்மா என்னும் கன்யையுடன் திருமணம் ஆயிற்று. பின்னர் வயதான பிறகு, கணக்காளராக பணியை துவக்கினார் ஸ்ரீதாஸர். கத்வால் சம்ஸ்தானத்திற்கு சேர வேண்டிய கப்பங்களை சரியாக கவனித்து, கொடுக்கும் பொறுப்பு அவருடையதாக இருந்தது. அதனை மிகவும் சரிவர செய்துவந்தார் ஶேஷப்பா.

ஶேஷப்பா மிகவும் கருணாமூர்த்தியாக இருந்தார். ஏழை எளிய மக்களின் கஷ்டங்களை போக்குபவராக இருந்ததால், அக்கம் பக்கத்து கிராமங்களில் அவருக்கு ஒரு நல்ல பெயர் கிடைத்தது. மக்கள் அவரை 'அப்பா அவரு' என்று அன்புடன் அழைத்து வந்தனர். ஶேஷப்பா, தமது வீட்டில் நிரந்தரமாக தார்மிக கார்யகிரமங்களை செய்து கொண்டு வந்தார். பற்பல பண்டிதர்களை, ஸாது, ஸத்புருஷர்களை தம் வீட்டிற்கு அழைத்து, அவர்களுக்கு தாராளமாக மரியாதைகளை செய்து வந்தார். ஹரிதாஸர்களின் பஜனை, புராண ப்ரவசனாதிகள் ஆகியவை அவரது வீட்டில் நிரந்தரமாக நடந்து வந்தது.

ஒரு முறை அந்தப் பகுதியில் சரியாக மழை பெய்யாததால், விளைச்சல் சரியாக வரவில்லை. ஆகவே, அரசுக்கு செலுத்த வேண்டிய கப்பங்களை மக்களால் சரியாக கட்ட முடிய

வில்லை. இந்த சமயத்தில், மக்களின் கஷ்டங்களை புரிந்து கொண்ட ஶேஷப்பா அவர்கள், அந்த கப்பங்களை தாமே அரசுக்கு கட்டினார். அப்போது கத்வால் சம்ஸ்தானத்தில் இருந்த அதிகாரிகள், ஶேஷப்பாவின் இந்த செயல் பிடிக்காமல், அரசரிடம் ஶேஷப்பாவின் மேல் தவறான அபிப்பிராயத்தை சொல்லி, அவருக்கு கெட்ட பெயர் பெற்றுத் தந்தனர். அரசரும் அவர்களின் பேச்சினை நம்பி, ஶேஷப்பாவின் மேல் பணம் கையாடல் செய்து விட்டார் என்று குற்றம் சாட்டினான். நிறைந்த சபையில் அவரை அவமானம் செய்து, தேக தண்டனையும் விதித்தான். அந்த சமயத்தில், ஶேஷப்பா அவர்கள் அணிந்த தலைப்பாகை கீழே விழுந்தது.

அன்றிலிருந்து ஶேஷப்பா அவர்களுக்கு லௌகிக வாழ்க்கையே வெறுத்துப் போனது. இன்னொருவருக்கு வேலை பார்ப்பது பிடிக்காமல் போனது. தலைப்பாகை கீழே விழுவது அவமானத்தின் குறிப்பு என்று கருதினார். உடனே அந்த வேலை விட்டு, அங்கிருந்து புறப்பட்டார். பலர் வற்புறுத்தியும், மறுபடி தனக்கு அந்த வேலை வேண்டாம் என்றார். இந்த சம்பவமே, அவர் ஆத்யாத்மிகத்தின் பக்கம் செல்ல ஒரு காரணமாக இருந்தது எனலாம்.

## கடினமான தவம்

அப்படியாக புறப்பட்ட ஸ்ரீதாஸர் அங்கிருந்து சிந்தரவேலி என்னும் இடத்திற்கு வந்தார். அந்த இடம் ஒரு பெருங்காடாக இருந்தது. மக்கள் அந்த பிரதேசத்திற்கு செல்லவே பயந்தனர். கிருஷ்ணா நதித்தீரத்தில் இருந்த அந்த இடத்தில், பிரகலாத அம்ச ஸம்பூதரான ஸ்ரீவ்யாஸராஜர் பிரதிஷ்டை செய்த முக்ய பிராண தேவரின் சிலை ஒன்று இருந்தது. பலகாலமாக பூஜை இல்லாமல் இருந்ததால், அவரது கழுத்து வரை மண் மூடி இருந்தது. அது பாம்புப் புற்றாகவும் மாறிவிட்டது. அந்த புற்றினை உடைத்தால், உள்ளேயிருந்து பாம்புகள் வந்து தொந்தரவு கொடுக்கலாம். நம்மையும் கடிக்கலாம். அதன்

மூலம் உயிரும் போகும் என்ற சிந்தனையில், ஸ்ரீதாஸர், அந்த புற்றினை உடைக்கும் முயற்சியில் ஈடுபட்டார். ஆனால், அந்த புற்றில் பாம்புகளே இருந்திருக்கவில்லை.

அப்படியே சுத்தம் ஆகிவிட்ட அந்த கோயிலை, மாலையில் கோமயம் தெளித்து மேலும் பெருக்கி, துடைத்து, ஸ்வாமியின் பூஜை செய்து, உபவாஸத்தினால் கிருஷ்ணா நதியின் தண்ணீரை மட்டும் குடித்தவாறு, அந்த கோயிலிலேயே படுத்து உறங்கினார். அன்றிரவு, ஸ்ரீதாஸரின் கனவில் ஸ்ரீப்ராணதேவர், அவரை அங்கேயே இருந்து சேவை செய்ய வேண்டும் என்று ஆணையிட்டார்.

அதற்கேற்ப, ஸ்ரீதாஸரும், அடுத்த நாளிலிருந்து சேவையை துவக்கினார். அது எப்படியென்றால், தினமும் விடியற் காலையில் எழுந்து, கிருஷ்ணா நதியில் ஸ்னான ஸந்த்யாதிகளை முடித்துக் கொண்டு, அதே வஸ்திரங்களால், ஸ்வாமியின் எதிரில் ஒரு மூலையில், ஒரு காலில் நின்றவாறு 'ஸ்வாமியே, என்னை உத்தாரம் செய்வாயாக' என்று ஜெபித்துக் கொண்டிருப்பார். பின்னர், அந்த வஸ்திரம் உலர்ந்தபின், தேவாலயத்தின் கிழக்கு திசையில் இருந்த கிணற்றில் ஸ்னானம் செய்து, மறுபடி அதே பிரார்த்தனையை செய்து வந்தார். இதைப் போலவே மாலை நேரம் வரையில் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். அந்த இடம் அபிராமணர்களால் நிறைந்திருந்ததால், அவருக்கு அன்று உபவாசமே ஆகிப் போனது.

சேவையின் இரண்டாம் நாள், அருகில் இருந்த தேவனஹள்ளி என்னும் கிராமத்தின் திம்மய்யா என்பவருக்கு கனவில் ஸ்ரீப்ராணதேவர் தோன்றி, அவருக்கு, ஸ்ரீதாஸரின் சேவைக்கு உதவி செய்யுமாறு ஆணையிட்டார். திம்மய்யா அவர்கள் பகவத் பக்தராக இருந்தாலும், அவர் ஏழையாக இருந்தார். ஆகவே, தினமும் அவர் கிராமத்தில் உஞ்சவிருத்தி செய்து, அதில் வரும் பதார்த்தங்களை கோயிலுக்குக் கொண்டு வந்து,

அதன் மூலம் ஸ்ரீதாஸருக்கு தேவையான உணவினை சமைத்துக் கொடுத்து, தாமும் அதிலேயே உண்டு வந்தார். இதன் மூலம் ஸ்ரீதாஸரின் தவம், எவ்வித தடைகளும் இன்றி நடக்குமாறு திம்மய்யா பார்த்துக் கொண்டார்.

சுமார் 3-4 நாட்களுக்குப் பிறகு, ஸ்ரீதாஸரின் தாய் இவரது இந்த தவத்தினைப் பற்றி கேள்விப்பட்டு, மிகவும் துக்கம் கொண்டார். உடனே ஸ்ரீதாஸர் இருக்கும் இடத்திற்கு வந்து, அவரை தரூருக்கு வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். ஆனால், ஸ்ரீதாஸர் திட்டவட்டமாக தமது தாயாரிடம் இவ்வாறு கூறினார். நான் இந்த இடத்தை விட்டு எங்கும் நகர்வதில்லை. நீ வேண்டுமானால், அவ்வப்போது வந்து என்னை பார்த்துப் போகலாம். இந்தப் பேச்சினை நீ கேட்கவில்லை என்றால், நான் தேசாந்திரம் போய்விடுவேன். பிறகு என்னை நீ பார்க்கவே முடியாது - என்றார்.

இதனைக் கேட்ட தாயார், மிகவும் பயந்து - அப்படியெல்லாம் செய்யாதே. நீ இங்கேயே இருந்தால் அதுவே எனக்குப் போதும். நான் அடிக்கடி வந்து உன் முகத்தை பார்த்துக் கொள்கிறேன் - என்று கூறினார்.

பின்னர், ஸ்ரீதாஸரும் தன்னுடைய சேவையை தொடர்ந்து செய்ய, 10-12 நாட்களுக்குப் பின், அவருக்கு குளிர் ஜுரம் வரப்போகிறது என்று ப்ராணதேவரின் குறிப்பு வர, அதன்படியே, ஸ்ரீதாஸர் எழுவதற்குள் அவருக்கு கடுமையான குளிர் ஜுரம் வந்துவிட்டது. ஆனாலும், அவர் அதே நிலையில் கிருஷ்ணா நதிக்கு ஸ்னானத்திற்குச் சென்றார். கடும் ஜுரத்தினை பொறுத்துக் கொண்டு, வழக்கம்போல ஒரு காலில் நின்று பிரார்த்தனை மற்றும் கிணற்றில் ஸ்னானம், மறுபடி தவம், மாலையில் உணவு என்று இவ்வாறு மிகவும் கஷ்டப்பட்டு 40 நாட்கள் தவம் செய்தார் ஸ்ரீதாஸர்.

இன்னொரு நாள் ஶ்ரீதாஸரின் கனவில், ஶ்ரீப்ராணதேவர் வந்து இவ்வாறு கூறினார். தேவாலய ஸ்வாமியின் அபிஷேக நீர் செல்லும் பாதையில் ஒரு மூலிகைச் செடி இருக்கிறது. அதனை நீ கண்மூடி எடுத்துக்கொண்டு தின்றால், உன்னுடைய குளிர்ஜுரம் நீங்கிவிடும் – என்றார். அதைப்போலவே, ஶ்ரீதாஸரும் செய்ய, அவரது ஜ்வர பாதை நீங்கியது.

இவ்வாறு மூன்று மாத கால சேவை முடிந்தபின், இன்னொரு கனவின் குறிப்பின்படி, கத்வால் தாஸரிடம் சென்று, பூர்வ ஆன்ஹிக, உத்தர ஆன்ஹிக, நித்யகர்ம விதி ஆகியவற்றை அறிந்து கொண்டு வந்து சேவை செய்ய வேண்டும் என்று ஶ்ரீப்ராணதேவர் ஆணையிட்டார். அதைப் போலவே, ஶ்ரீதாஸரும் செய்ய, மேலும் சில நாட்கள் ஆனபிறகு, சிப்பகிரிக்குச் சென்று ஶ்ரீவிஜயதாஸரின் சேவையை செய்யுமாறு ஆணை வந்தது. அதன்படி, ஶ்ரீதாஸரும் சிப்பகிரிக்குச் சென்று, ஶ்ரீகோபாலகிருஷ்ண ஸ்வாமியின் பக்தரான ஶ்ரீவிஜயதாஸரின் மகிமைகள் என்னும் பிரவாகத்தில் அவகாஹன ஸ்னானம் செய்தார். அதாவது, தினம்தோறும் ஶ்ரீவிஜயதாஸரின் மகிமைகளை கொண்டாடியவாறு, அவருடைய கிரந்தங்களை படித்தவாறு, சேவை செய்தார் என்று அறிய வேண்டும்.

அப்போது ஆண்டு 1855 (சக 1777) ராக்ஷஸ நாம ஸம்வத்ஸர மார்கசிர பஹுள சப்தமி வெள்ளிக்கிழமையன்று, ஶ்ரீவிஜய தாஸரே, ஶேஷப்பனின் கனவில் வந்து அருளினார். தம் பிம்பமூர்த்தியை வணங்கியவாறு ‘குரு விஜயவிட்டலா’ சேவகன் இவன் என்று ஆசிர்வாதம் செய்தார். இந்த சம்பவம் ஆனபிறகு, ஶேஷப்பா அவர்கள், ஶ்ரீவிஜயதாஸரின் ஆணைப்படி, ‘குருவிஜயவிட்டலா’ என்பதையே தம் அங்கிதமாக ஏற்றுக் கொண்டு, ஹரிதாஸர் ஆனார். இந்த சம்பவத்தை, ஶேஷதாஸரே, தம் உகாபோகம் ஒன்றில் இவ்வாறு கூறுகிறார்.

கு3ரு விஜயராயரொந்து3 ஸம்முக2த3ல்லி ப3ந்து3
பரிவ்யாப்தனாத3 ஹரிய விவிக்ஷதி3
பரிபரி வித3தி3ந்த3 ஸ்துதிஸி ப்ராந்த்யத3ல்லி
கு3ரு விஜயவிட்டலன்ன ஸேவக நீனெந்த்3
கருணதி3ந்த3 நினகெ3 இதே3 முத்3ரிகவு எம்ப3
தெரனாத3 ஸஞ்ஞுவெந்து3 ஸூஸிஸிதி3
பரம த4ன்யனாதெ3 கு3ரு விஜயதா3ஸரிகெ3
சரண ஸேவகனாதெ3 நின்ன த3யதி3
கு3ருக3ள த்3ரோஹதி3ந்த3 முக்தனாகி3 நின்ன
கு3ருஹு காணுவ அதி4காரியாதெ3
பரிபூர்ண க்ருபாநிதே4 கு3ருவிஜயவிட்டல நின்ன
கருணத3 ப2லவிதெ3 பா3ளிது3த3கெ ||

## 'ஸேஷதாஸ குட ஆஹே'

சிந்தரவேலியில் கடும் தவத்தினை செய்து, ப்ராணபதியின் அருளைப் பெற்று, அவருடைய ஆணைப்படி சிப்பகிரிக்கு வந்து, ஸ்ரீவிஜயதாஸரை வணங்கி, அவரிடமிருந்து 'குருவிஜய விட்டலா' என்னும் ஸ்வப்ன அங்கிதத்தைப் பெற்று, ஸேஷப்பா, அன்றிலிருந்து ஹரிதாஸர் ஆகி, தாஸ பங்க்தியில் சேர்ந்தார். அவருடைய வாழ்க்கை முறையில் பலத்த மாற்றம் ஏற்பட்டது. அனைத்தும் ஹரியின் அதீனம் என்னும் சிந்தனை வலுப்பட்டது. எதிரிகளில் & நண்பர்களில் ஸ்ரீஹரியே நிலைத் திருக்கிறான் என்னும் அறிவு திடமாயிற்று. அனைத்து இடங்களிலும் ஹரியின் இருப்பினை சிந்தித்தவாறு, தாஸர், தம் பிம்பமூர்த்தியான குருவிஜயவிட்டலனின் ஸ்மரணையை செய்யத் துவங்கினார்.

ஸ்ரீசக்ரபாணி குருவிஜயவிட்டலன்ன யோசனே மாடுவ யோக - அவருக்குக் கிடைத்தது.

நின்ன நோடு3வ ஸுக2 முக்திய ஸுக2வய்ய
நின்ன நோடு3வ கால முக்தியாத3 கால

நின்ன நோடு[3]வ மனுஜ த்ரைலோகத[3]ல்லி பூஜ்ய
க[4]ன்ன மஹிம கு[3]ருவிஜயவிட்டலரேய
நின்ன நோள்பன பா[4]க்[3]ய எணிகெ மாடு[3]வன்யாரோ

என்று ஶ்ரீதாஸர் பார்த்தஸகனின் தரிசன சுகத்தினால் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டார். ஹரிவாயுகுருகளின் பரம அருளால், ஶேஷதாஸர் அபரோக்ஷிகளின் வரிசையில் அமர்ந்தார்.

ஹரிதாஸர் ஆனபிறகு, ஶ்ரீதாஸர் தம் பிறந்த ஊரான தரூரில் சில காலம் நிலைத்திருந்தாலும், தம் வாழ்க்கையின் பிற்பகுதியை மொதலகல்லிலேயே வசித்து வந்தார். கிரீஷாசலத்தின் மகிமைகளை அறிந்திருந்த ஶேஷதாஸர் அங்கு, ஸ்வயம் வ்யக்தராக இருந்த ஶ்ரீனிவாஸனின் சேவைக்காக தம் மிச்ச ஆயுளை கழித்தார். தேவாலயத்தின் அருகிலேயே ஒரு கொட்டகையை செய்து கொண்டு அங்கேயே தங்கி வந்தார். 'விஜயதீர்த்தத்தை' அங்கு நிர்மாணித்து, ஒரு அன்ன சத்திரத்தை திறந்து, ஸ்வாமியின் தரிசனத்திற்காக வரும் யாத்திரிகர்களுக்கு இலவச அன்னதானமத்தை செய்யும் பவித்ரமான காரியத்தை துவங்கினார். இந்த விஷயத்தையே, ஶ்ரீதாஸரின் சமகாலத்தவரான ஹரபனஹள்ளி பீமவ்வா அவர்கள்:

உத்தமவாகி[3]த்த தி[3]வ்ய சத்ர விஜயதீர்த்த[2] நிர்மிஸி
நித்யத[3]லி ம்ருஷ்டான்னதா[3]ன விஸ்தாரவனெ பேளலோஷவே

என்று 'ஸ்மரிஸி பதுகிரோ ஸர்வானந்த குருகள' என்னும் கீர்த்தனையில் கொண்டாடியிருக்கிறார்.

அந்த காலத்தில், அனேக மஹாமஹிமைகள் ஆயின. கத்வாலில் இருந்த அனேக ஸஜ்ஜனர்கள் சிந்த்ரவேலி தேவாலய மற்றும் மண்டபங்களை கட்டுவித்தனர். தினமும் நூற்றுக்கணக்கான மக்கள், தமக்கு வந்த ஆபத்துகளை போக்கிக் கொள்வதற்காக இங்கு வந்து சேவை செய்து,

தங்களின் இஷ்டார்த்தங்களை அடைந்து கொண்டிருந்தனர். ஸ்ரீதாஸர், நிரந்தரமாக பூஸுரோத்தமர்களின் ஆராதனைகளை, அன்ன, வஸ்த்ர, திரவியங்களாலும் செய்து அனைவரையும் மகிழ்ச்சிப்படுத்திக் கொண்டிருந்தார். இத்தகைய மகாத்மரின் ஸ்மரணையை செய்தாலே கோரமான பிசாசுகள் தூரத்திலிருந்தே ஓடிப் போய்விடுகின்றன.

ஒரு முறை, ராய்ச்சூர் ஜில்லா கல்மலா என்னும் கிராமத்தில் இருக்கும் வெங்கடரமண ஸ்வாமியின் பிரதிமையை துஷ்டரான திருடர்கள் சிலர் உடைத்துவிட்டனர். ஆகையால், அதனை மறுபடி பிரதிஷ்டை செய்ய வேண்டும் என்று அந்த ஊர் மக்கள் ஸ்ரீதாஸரை கேட்டுக் கொண்டனர். ஸ்ரீதாஸர் இன்னொரு புதிய சிலையை அங்கு நிர்மாணம் செய்ய வில்லை. முன்னர் உடைந்த சிலையையே, சரிப்படுத்தி, ஸ்ரீஹரியை பிரார்த்தனை செய்துகொண்டு, அதையே பிரதிஷ்டை செய்தார். அந்த அர்ச்சகரை ஏழு நாட்கள் உபவாசம் இருக்கச் செய்து, தினமும் பிராமண போஜனாதிகளை செய்வித்து, 8ம் நாள் அனைத்து ஸஜ்ஜனர்களுடன், மங்கள ஸ்னானாதிகளை செய்து கொண்டு, மங்கள வாத்தியங்களுடன் வந்து, தேவாலயத்தின் கதவினைத் திறந்து பார்க்க, ஸ்ரீவெங்கட ரமணனின் சிலை, முதலில் இருந்ததைப் போலவே சிறிதும் கூட பின்னம் இல்லாமல் ஆகியிருந்தது. ஆகையால், அனைத்து மக்களும், ஸ்ரீதாஸரின் அற்புத சக்தியை / பக்தியை கண்டு மகிழ்ந்தனர்.

ஒரு நாள், ஸுரபுர கிராமவாசிகளான மணூர் ராமாசார்யர் என்னும் பண்டிதர் தன்னுடைய மகனான பீமாசார்யர் என்னும் பாலகனை அழைத்துக் கொண்டு, யாசகத்திற்காக, ஹுமனாபத்தின் மாணிக்க பிரபுகளிடம் சென்றார். அங்கு, அவருடைய சில அஸாத்தியமான திறமைகளைக் கண்டு, மகன், தன் தந்தைக்குத் தெரியாமல், அவரிடம் சென்று, தன்னை அவருடைய சிஷ்யனாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினான். அதனைக் கேட்ட அவர், அன்று எந்த பதிலும்

அளிக்காமல், அடுத்த நாள் ‘பாலகனே. நீ அஞ்ஞானியான பாலகன். எதுவும் அறியாமல் நீ இங்கு வந்து இவ்வாறு கேட்டதால், உன்னை ஏமாற்றுவது என்பது சரியல்ல. ஆகையால் உனக்கு ஒரு உண்மையை சொல்கிறேன். நீ எங்களுடைய வர்க்கத்தவன் அல்ல. உனக்கு உபதேசக குரு வேறொருவர் இருக்கிறார். அவரிடம் நீ செல்ல வேண்டும்’ என்று கூறினார். இதைக் கேட்டு மகிழ்ந்த அந்த பாலகன், அந்த குரு எங்கே இருக்கிறார் என்று கேட்டதற்கு, கிருஷ்ணா துங்கபத்ரா இரு நதிகளின் நடுவில் இருக்கும் கத்வால் சம்ஸ்தானத்தில் ருத்ராசல க்ஷேத்திரத்தில் இருக்கிறார் என்றார்.

பிறகு, சில நாட்கள் கழித்து, இந்த பீமாசார்யர் என்னும் பாலகன், கத்வால் சம்ஸ்தானத்தில் நடக்கும் கார்த்திக உத்ஸவத்திற்கு வந்து, அங்கு, கிரீஷாசலபதியின் தரிசனத் திற்காக வந்தான். அங்கு மஹாத்மரான, ஶேஷதாஸர் இருந்த காரணத்தால், அவருடைய தரிசனத்தைப் பெற்றான். உடனே அபரோக்ஷ ஞானிகளான தாஸர் இவனைப் பார்த்து ‘பாலகனே. பலிகுமாரனின் பேச்சினைக் கேட்டு இங்கே வந்தாயா?. அவர் பல ஆண்டுகளாக, நம்முடைய எதிர்வாதிகளாக இருந்தாலும், உனக்கு ஒரு நல்வழியை காட்டியிருக்கிறார். ஆகவே, உனக்கு பகவத் அருள் பரிபூரணமாக இருக்கிறது’ என்று சொல்லி, தனிமையில் அவனுக்கு மந்திரோபதேசத்தை செய்தார். அன்றிலிருந்து அந்த பாலகன், ஸ்ரீதாஸரின் பரம நம்பிக்கையைப் பெற்ற பரம சிஷ்யன் ஆனான்.

ஒரு நாள் மதியத்தில், தற்செயலாக ஆயிரக்கணக்கான ரூபாய்களின் மதிப்பு கொண்ட ஒரு குதிரையில் ஏறி ஒரு மஹாபுருஷன் வந்து, குதிரையில் மேலேயே அமர்ந்தவாறு ‘ஶேஷதாஸ குடே ஆஹேத்’ என்று ஸ்ரீதாஸரின் கேள்வி கேட்டான். இதனைக் கேட்ட ஸ்ரீதாஸர் ‘தாங்கள் யார்?. தங்களின் பெயர் என்ன?’ என்றார். அப்போது அந்த மஹாபுருஷர் ‘என்னுடைய கிராமம் பண்டரிபுரம். என் பெயர்

பாண்டுரங்கன். உங்களை பார்ப்பதற்கே வந்திருக்கிறேன். மற்றும் உங்களால் இயற்றப்பட்ட ஸுளாதிகளை கேட்க வேண்டும்' என்று சொல்லியவாறு, பின் நொடிப்பொழுதில் அங்கிருந்து மறைந்து விட்டார். அந்த மகிமையை பார்த்த அனைத்து மக்களும், ஸ்ரீதாஸரின் மகிமையை கொண்டாடி, சாட்சாத் ஸ்ரீபாண்டுரங்க ஸ்வாமியே வந்து ஸுளாதி ஆகியவற்றை இயற்றுவதற்கு ஆணையிட்டிருக்கிறார் என்பதை அறிந்தனர்.

தினமும் தாஸார்யர் தன்னுடைய நித்யானுஷ்டானத்திற்கு, கிருஷ்ணா நதிக்குச் சென்று, ஸ்னான ஸந்த்யாதிகளை முடித்து, வெகு காலம் அந்த நதி தீரத்திலேயே ஜபம் செய்தவாறு, மெய்மறந்து அங்கேயே அமர்ந்து விடுவது வழக்கமாக இருந்தது. இத்தகைய சமயத்தில், ஸ்ரீதாஸருக்கு வெயிலின் தாக்கம் இருக்கக்கூடாது என்று, தேவனஹள்ளி தம்மய்யா அவர்கள், தாஸரின் தியான காலத்தில் ஒரு வேட்டியை வெயிலுக்கு மறைவாக பிடித்திருந்தார். பின்னர், ஜபம் முடியும் காலத்தில் அவர் நகர்ந்து விடுவது வழக்கம். இந்த செயல் ஸ்ரீதாஸருக்கு தெரியாததாக இருந்தது.

இப்படியே ஒரு நாள், ஸ்ரீதாஸர் ஜபம் செய்து கொண்டிருக்கையில், திம்மய்யா அவர்கள் வெயிலை மறைத்தவாறு நின்றிருக்கையில், திடீரென்று நதியில் பிரவாகம் அதிகரித்தது. தண்ணீர் திம்மய்யா அவர்களின் துடை வரை வந்துவிட்டது. ஆனாலும், திம்மய்யா அவர்கள், ஸ்ரீதாஸரை விட்டுச் செல்லவில்லை. தியானம் செய்பவரை தொந்தரவு செய்வதற்கும் அவருக்கு மனம் வரவில்லை. அப்படியே நின்று, அவரும் பகவத் தியானம் செய்யத் துவங்கினார்.

பிறகு, ஸ்ரீதாஸர் தமது அனுஷ்டானங்களை முடித்து எழுந்து பார்த்து, உடனடியாக திம்மய்யா அவர்களுக்கு, படிகளில் மேலே செல்லுமாறு ஆணையிட்டார். ஆனால், திம்மய்யா,

ஸ்ரீதாஸரை தனியாக விட்டுச் செல்ல மாட்டேன் என்றார். அதற்கு ஸ்ரீதாஸர் 'நான் முதலில் சென்றுவிட்டால், பிறகு நீ வருவதற்கு சமயம் போதாது. ஆகவே நீ முதலில் செல்' என்றார். அவரது வாக்கினை புரிந்துகொண்ட திம்மய்யா, மேலே ஏறிச் சென்று திரும்பிப் பார்க்க, ஸ்ரீதாஸரும் படிகளில் ஏறி வர, பின்னர் பொங்கி வழிந்த நதி, வெள்ளமாக அடித்துச் செல்லத் துவங்கியது. ஆஹா. கிருஷ்ணா நதியும் ஸ்ரீதாஸரின் தவத்திற்கு தடை உண்டாக்கக்கூடாது என்று காத்திருந்தாள் என்றே சொல்ல வேண்டும்.

தாஸர் தனது நித்ய கர்மானுஷ்டங்களின்படி, கோயிலின் கர்ப்பகிரஹத்தில் தன்னை பூட்டிக் கொண்டு, தவம் செய்து வந்தார். அப்போது ஒரு நாள், லிங்கஸுகூர் ராமதாஸர் என்பவர் அங்கு வந்து, அந்த கதவில் இருந்த இடைவெளியில் உள்ளே ஸ்ரீதாஸரை பார்க்க முயன்றபோது, ஸ்ரீதாஸரின் கழுத்தில் ஒரு பாம்பு சுற்றிக் கொண்டிருப்பதையும், அவரது தலை மேல் அதுவும் படம் எடுத்தவாறு நின்றிருப்பதையும் பார்த்தார். அதைக் கண்டு பயந்த ராமதாஸர், உடனே விலகினார். பின்னர், ஸ்ரீதாஸரிடம் அவர் விஶேஷ பக்தியை காட்டத் துவங்கினார். தாஸரோ இந்த விஷயம் யாருக்கும் தெரியக்கூடாது என்று அவரிடம் ஆணையிட்டார். பல ஆண்டுகளுக்குப் பிறகு, அதனை ராமதாஸரே, யளமேலி விட்டலாசார்யரிடம் கூறினார்.

இந்த ராமதாஸர் யார் என்றால், ஸ்ரீகுருப்ராணேஷ தாஸரின் தங்கையின் மகன். இவர் மூன்று மாத குழந்தையாக இருந்த போது, இவரை ஸ்ரீஜகன்னாததாஸரின் துடையின் மேல் படுக்க வைத்தனர். ஸ்ரீஜகன்னாத தாஸரும் குழந்தையின் முகம் பார்த்து, இவனுக்கு 12 வயதிற்குப் பிறகு பேச்சு நின்றுவிடும். ஆனால், நீ கவலைப்படாதே. சில காலம் கழித்து, மறுபடி இவன் பேசுவதோடு மட்டுமல்லாமல், பெரிய ஞானியாகவும் வருவான் என்று ஆசிர்வதித்தார். பின்னர், அதன்படியே நடந்தது என்பதையும் அறிகிறோம்.

ஸ்ரீதாஸர், ஆதிஷிலா க்ஷேத்திரத்தில் இருந்தபோதே, பகவந்தனின் ஆணைப்படி, இரண்டாம் திருமணம் செய்து கொண்டார். பிறகு, ஒரு நாள், ஸ்ரீதாஸரின் பேரனான விஜய ராயர், சிறிய குழந்தையாக இருந்தபோது, தொட்டிலில் படுத்திருந்தபோது மெதுவாக அழத் துவங்கினார். அதே சமயத்தில், ஒரு சுமங்கலிப் பெண், ஸ்ரீதாஸரிடம் வந்து, தனக்கு வ்ருச்சிக பாதை (தேள் கடித்தல்) இருக்கிறது என்றும், அதற்கு ஒரு தீர்வு சொல்லுமாறும் அவரை கேட்டுக் கொண்டார். அவரோ, தொட்டிலில் படுத்திருக்கும் இந்த குழந்தையை சமாதானம் செய், உனது பிரச்னை தீரும் என்று கூறினார். அதற்கேற்ப, அந்த சுமங்கலியும், குழந்தையின் முதுகில் தட்டி சமாதானம் செய்ய, அவரது பிரச்னையும் படிப்படியாக குறைந்து வந்து, தீர்ந்தது.

இதைப் போல பல்வேறு மகாமகிமைகளை ஸ்ரீதாஸர் நிகழ்த்திக் காட்டியிருக்கிறார். ஒரு முறை, பற்பல மனிதர்கள் பேய் / பிசாசு பிடித்தவர்கள், இவருடைய ஆணைப்படி, ஸ்ரீப்ராணதேவரின் சேவையை செய்து வந்தனர். ஆனால், இவர் யாருக்கும் தனியாக எவ்வித சிகிச்சையையும் செய்யவில்லை. ஏதாவது ஒருவரின் உறவினர் வந்து ஸ்ரீதாஸரின் - அந்த பாதிக்கப்பட்டவருக்கு ஏதேனும் தீர்வு இருக்கிறதா? என்று கேட்டால் - அருகில் உள்ள கிருஷ்ணா நதியிலிருந்து ஒரு சொம்பு தண்ணீர் கொண்டு வரச் சொல்வாராம். அந்த தண்ணீரை ஸ்ரீதாஸர் பார்த்த உடனேயே, அது கொதிநிலையை அடைந்துவிடும். அந்த சொம்பினை ஒரு வஸ்திரத்தில் பிடித்துக் கொண்டு, அந்த வெந்நீரை, அந்த பிசாசு பிடித்தவர் மேல் ப்ரோக்ஷணை செய்ய, உடனடியாக அந்த தண்ணீர் தேகத்தில் பட்ட இடத்திலெல்லாம், கொப்பளங்கள் உண்டாகி, அதன் மூலம், பிசாசு பிரச்னையும் தீர்மானம் ஆகிவிடுமாம்.

இப்படியாக, ஸ்ரீதாஸரின் தவசக்தி யாராலும் வர்ணிக்க முடியாததாகும். பிசாசு பிடித்தவர்களிடன் தனியாக பேசுவதில்லை. அவர்களுடைய தீர்வுக்காக, மந்த்ர ஜபங்களை

செய்வதில்லை. மேலே கூறியதைப் போலவே மட்டும் செய்து எத்தகைய பிரச்னைகளைக் கொண்டவர்களையும் சரிப்படுத்திக் கொண்டிருந்தார் ஸ்ரீதாஸர்.

## ஶேஷதாஸரின் கிருதிகள்

ஸ்ரீஶேஷதாஸரின் கிருதிகள் அனைத்தும் ஹரிதாஸ ஸாகித்யத்தின் விலைமதிக்க முடியாத பொக்கிஷங்களே ஆகியிருக்கின்றன. பண்டரீசனின் ஆணைக்குப் பிறகு, அவர் தினமும் ஒவ்வொரு ஸுளாதியை இயற்றும் வழக்கத்தைக் கொண்டிருந்தார் என்று தெரிய வருகிறது. சில உகாபோகங்களையும் அவர் இயற்றியிருக்கிறார். தற்போது கிடைத்திருக்கும் வகையில், 43 ஸுளாதிகள், 14 உகாபோகங்கள் மற்றும் 4 கீர்த்தனைகளே நம்மிடையே இருக்கின்றன. இவற்றைத் தவிர, ஸ்ரீதாஸர், பஞ்சப்ரமேய என்னும் கத்ய ரூபத்திலான ஒரு நித்ய கர்மானுஷ்டான கிருதி, பஞ்சபேத, கீதா ப்ரமேய, ஸாந்தீப ப்ரமேய, ஸ்ரீஹரிகதாம்ருத ஸார மங்களாசரண ஸந்தியின் வ்யக்யானங்களை இயற்றியிருக்கிறார். இவை அனைத்தும், ஸ்ரீதாஸரின் அற்புத ஞானத்தை பறைசாற்றும் விதமாக இருக்கின்றன. ஸ்ரீதாஸர், ஸ்ரீவிஜயதாஸரின் சக்ராப்ஜ மண்டலத்திற்கு விவரமான வ்யாக்யானத்தை இயற்றியிருக்கிறார் என்று தெரிய வருகிறது. ஆனால், அது இன்னும் நமக்கு கிடைக்கவில்லை. இவை அனைத்தையும் லிங்கஸுகூரின் ஸ்ரீவரதேந்திர ஸாகித்ய மண்டலியும் மற்றும் தாஸரின் அந்தரங்க பக்தரான ஸ்ரீகுரு மத்வராவ் உப்பிலி ஆகியோரே பாதுகாத்து, வெளியிட்டும் வந்திருக்கின்றனர்.

ஶேஷதாஸர் இயற்றியிருக்கும் ஸுளாதிகள் மிகவும் கம்பீரமான அர்த்தங்களை கொண்டிருக்கின்றன. தாஸர் தம் வாக்குகளை நிறுவ, பகவத்கீதை, பாகவதம் ஆகிய கிருதிகளின் வாக்கியங்களை, சில இடங்களில் குறிப்பாகவும் சில இடங்களில் அப்படியே மேற்கோள் காட்டியிருக்கிறார்.

கீதையின் வாக்கியங்களே பல இடங்களில் மேற்கோள் காட்டப் பட்டுள்ளது. தாஸரின் ஸுளாதிகளை தொடர்ந்து படித்து வந்தால், சாஸ்திர கிரந்தங்களை படிப்பதைப் போலவே, அர்த்தம் கொண்டதாக இருக்கிறது. ஶேஷதாஸரின் ஸுளாதிகளில் மிகவும் நீளமான ஸுளாதி என்றால் அது 'முகவன்னே மாடுவுது மர்மவ நீனரிது' என்று துவங்குவதான ஞானயக்ஞ ஸுளாதி. ஜதையையும் சேர்த்து, மொத்தம் 20 நுடிகள் இருக்கும் இந்த ஸுளாதியில் அத்யாத்ம உபாஸனையின் ஸூத்ரமே அடங்கியிருக்கிறது.

ஸ்னானவில்லத$^3$ கர்ம எணிகெ இல்லத$^3$ ஜப
பான இல்லத$^3$ அன்னதா$^3$னத$^3$ந்தெ ।
ஞானவில்லத$^3$ கர்ம ஏனேனு மாட$^3$லு
மாணதெ$^3$ க$^3$ஜபு$^4$க்த கபித்த$^2$வது$^3$ ।
'கர்மணா ஞானமாப்னோதி ஞானேன அம்ருதீ ப$^4$வதி'
ஈ நுடி$^3$ ப்ரமாணத$^3$ந்தெ ஜனரு கேளி
ஞானமார்க்க$^3$தி$^3$ந்த$^3$ ஹரிய யுஜிஸோ ।

என்று, ஞானத்தின் மேன்மையை, ஸ்ரீதாஸர் இங்கு மிகவும் அழகாக கொண்டாடியிருக்கிறார்.

மேலும், ஸ்ரீஹரியின் கர்த்ருத்வ சக்தி, ஜீவனின் அஸ்வதந்த்ரத்வ, பஞ்ச பேதாதி மத்வ மதத்தின் ப்ரமேயங்கள், த்யான விதான, ஸாதனையின் மகத்துவம், ஸ்ரீஹரியின் பக்த வாத்ஸல்யம், விரக தாபம் ஆகிய அனைத்தையும் இங்கு மிகவும் உணர்ச்சிபூர்வமாக, ஸுளாதியின் ரூபத்தில் விளக்கியிருக்கிறார். ப்ராணதேவரைக் குறித்து அதிகமான ஸுளாதிகளை இயற்றியிருக்கிறார் ஸ்ரீதாஸர்.

யதார்த்த$^2$வாகி$^3$ எனகெ$^3$ ப்$^4$ராத்ரு நெனெஸி
ப்$^4$ராத்ரு நிஷ்டவாத$^3$ க்ருபெய மாட$^3$தெ$^3$ என்ன
ப்ரதிதி$^3$னத$^3$லி என்ன பி$^3$ட$^3$தெ$^3$ ப$^3$ளலிஸலு
ப்$^4$ராத்ருனெம்ப்போ$^3$க்திகெ$^3$ வ்யாஹதி பா$^3$ரதே$^3$னோ?

என்று ஶ்ரீதாஸர், பவன ராயரை கேட்கிறார். தனது முற்பிறவியின் சம்பந்தத்தை நினைவுபடுத்தி, தற்போது தனது வேண்டுகோள்களை நிறைவேற்றுமாறு கேட்கிறார்.

ஷுக்ரவாரத ஸுளாதி என்று பெயர் பெற்ற 'இந்து முகியெ நின்ன ஸந்தருஷனதிந்த ஆனந்தவாயிது அரவிந்த நயனெ' என்னும் ஸுளாதி, ரமாதேவியின் அபாரமான மகிமைகளை அழகாக வர்ணிக்கிறது. திருமணத்தைப் பற்றி ஶ்ரீதாஸர் இயற்றியிருக்கும் 'வைவாஹ மாடிதெ விபவ பூர்வகதிந்த' என்பது தாஸ ஸாகித்யத்தில் ஒரு அபூர்வமான ஸுளாதி. திருமண சமயத்தில் செய்ய வேண்டிய அனுஸந்தானங்களை யும், வது, வரர்களில் சிந்திக்க வேண்டிய பகவத் ரூபங்களின் வர்ணனைகளும் இந்த ஸுளாதியில் செய்யப்பட்டுள்ளது.

ஶ்ரீஶேஷதாஸர் இயற்றியிருக்கும் உகாபோகங்கள், மந்த்ர துல்யமாக இருக்கின்றன. தாஸர் இயற்றியிருக்கும் 'பக்த வத்ஸலனெம்ப பிருதுள்ள தேவ நின்ன | பகுதியிந்தலி நமிஸி பின்னயிஸுவெ' , 'பக்தர மனோரத பூர்ணமாடுவல்லி உக்தவாத காமதேனு எனிபெ' மற்றும் 'ஷத்ருமித்ரரல்லி ஸமஸ்திதனு நீனெ' என்னும் இந்த மூன்று உகாபோகங்களும் மிகவும் சிறப்பு வாய்ந்தவை.

1.

ப$^4$க்தவத்ஸலனெம்ப$^3$ பி$^3$ருது$^3$ள்ளதே$^3$வ நின்ன
ப$^4$குதியிந்த$^3$லி நமிஸி பி$^3$ன்னயிஸுவெ
ரிகதன பி$^3$ன்னபன மனகெ தந்து$^3$வேக$^3$ ஆ
ஸகுதியிந்த$^3$லி க்$^3$ரஹிஸி ஸப$^2$லமாடோ$^3$
ப$^4$குதனாத$^3$ இவகெ$^3$ லௌகிகதி$^3$ந்த$^3$ ப$^3$ந்த$^3$
விகடரூபவாத$^3$ து$^3$ரிததி$^3$ந்த$^3$
முகுதன்ன மாடு$^3$வது$^3$ கருணதி$^3$ந்த$^3$லி வேக$^3$
ஶகடப$^3$ஞ்சன ஶ்ரீகிருஷ்ண உத்க்ருஷ்டனு நீ
முகுதிதா$^3$யக கு$^3$ருவிஜயவிட்டல ம
த்ப$^4$க்தன ப்ரணஶ்யதி எம்போ$^3$து$^3$ ஸத்யமாடு$^3$ ||

2.

ப$^{4}$க்தர மனோரத$^{2}$ பூர்ணமாடு$^{3}$வல்லி
உக்தவாத$^{3}$ காமதே$^{4}$னு எனிபெ |
ப$^{4}$க்தர அபராத$^{4}$ ஸஹன மாடு$^{3}$வரல்லி
தா$^{3}$ரித்ரி ஸமானனெனிப ஸார்வபௌ$^{4}$ம
ப$^{4}$க்தர மேலெ மஹா கருண மாடு$^{3}$வல்லி
மித்ரனெனிஸிகொம்போ$^{3}$ அனிமித்த ப$^{3}$ந்து$^{4}$
ப$^{4}$க்தர து$^{3}$ரித களெது$^{3}$ காவ விஷயத$^{3}$ல்லி |
ச$^{2}$த்ர நெனிபெ ஸதத ஸன்மங்க$^{3}$ளாங்க$^{3}$
ப$^{4}$க்தர நிந்த$^{3}$கர நிக்$^{3}$ரஹ மாடு$^{3}$வல்லி
ம்ருத்யு யம ஸத்$^{3}$ருஷனெனிப தே$^{3}$வ
ப்$^{4}$ருத்யவத்ஸல கு$^{3}$ருவிஜயவிட்டல ரேயா
ப$^{4}$க்தர பொரெவ பி$^{3}$ருது$^{3}$ நின்னத$^{3}$ய்யா ||

3.

ஶத்ருமித்ரக$^{3}$ளல்லி ஸமஸ்தி$^{2}$தனாகி$^{3}$ நீனெ
ப்ரக்ருதி ஜீவகால அனுஸரிஸி
க்ருத்யவ மாள்பவனாகி$^{3}$ ஜீவர்கெ$^{3}$ ஸுக$^{2}$து$^{3}$க்க$^{2}$
மொத்தக$^{3}$ளுணிஸுவி நியமத$^{3}$ந்தெ
கர்தனெந்து$^{3}$ நின்ன நெரநம்பி$^{3}$ இப்பவங்கெ$^{3}$
து$^{3}$ஷ்டத்யக$^{3}$ளில்லவெந்து$^{3}$ ஶாஸ்த்ரஸித்$^{3}$த$^{4}$ |
சித்தக்கெ தந்து$^{3}$ தூ$^{3}$ரத்$^{3}$ருஷ்டியிம் நோடி$^{3}$
உத்தமவாத$^{3}$ ஸுக$^{2}$வைதி$^{3}$புதோ$^{3}$ |
ப$^{4}$க்தவத்ஸல கு$^{3}$ருவிஜய விட்டலரேயா
எத்தலித்$^{3}$த$^{3}$ரு நின்ன பொந்தி$^{3}$த$^{3}$வனு ||

நவாப்பின் கோபத்திற்கு ஆளாகி, மரணதண்டனை பெற்ற தன் சிஷ்யரான கல்லூரு கிருஷ்ணப்ப என்பவரை அந்த தண்டனை யிலிருந்து காப்பாற்ற, ஸ்ரீதாஸர், மேற்கண்ட இந்த மூன்று உகாபோகங்களையும் இயற்றி, அபிமந்த்ரணம் செய்து, அக்ஷதையுடன் அவருக்குக் கொடுத்தார் என்று சொல்லப் படுகிறது. அந்த உகாபோகங்களையும், மந்திராட்சதையும் தலையில் ஏந்திச் சென்ற அந்த சிஷ்யரை, நவாப்பின்

காவலர்கள் துப்பாக்கியால் சுட முயன்றபோது, ஒரு குண்டு கூட அந்த துப்பாக்கிகளிலிருந்து வெளிவரவில்லை. ‘குதா கா ஆத்மி ஹை, சோட் தோ’ என்று அந்த நவாப், கிருஷ்ணப் பனை விட்டுவிடுமாறு ஆணையிட்டான் என்றும் அறிகிறோம்.

இன்னெஷ்டு காலக்கெ மரியாத$^{3}$ந்தெ மாடி$^{3}$ஸிதி$^{3}$
உன்னத மஹிம நின்ன இச்சக்கெ யிதி$^{3}$ராரோ
இன்னாத$^{3}$ரு நீ க்ருபெயிந்$^{3}$த நோட$^{3}$தி$^{3}$ரெ
க$^{4}$ன்னவாத$^{3}$ து$^{3}$க்க$^{2}$தி$^{3}$ந்த$^{3}$ க$^{1}$டி$^{3}$கெ$^{3}$ ஜதுவினெந்தோ
சின்மய மூருதி கு$^{3}$ருவிஜயவிட்டல ரேயா
என்ன அபராத$^{4}$வு நினக$^{3}$ர்ப்பிதவு

என்னும் இந்த உகாபோகம் மிகச் சிறியதாக இருந்தாலும், ஸர்வ ஸமர்ப்பணையின் மகிமையை அபாரமாக விளக்குகிறது.

இதைப்போலவே ஸ்ரீதாஸர் இயற்றிய நான்கு கீர்த்தனைகளும்கூட அற்புதமாக இருக்கின்றன.

கோடித்$^{3}$ரவ்யவு இத்து மீடகவடி$^{3}$ இல்லதெ$^{3}$
காடிகாணதெ$^{3}$ ஸொரகி$^{3}$ மருகி$^{3}$த$^{3}$ந்தெ |
காடகாம்ப$^{3}$ரதா$^{4}$ர கு$^{3}$ருவிஜயவிட்டல ரேய
தா$^{3}$டுவரு இல்ல நின்ன ப்ரப$^{3}$ல ஶாஸனவ ||

‘பாலலிபி பரிஹரிஸிகொம்புவருண்டெ’ என்னும் கீர்த்தனையில் வரும் இத்தகைய நுடிகள், ஹரிதாஸர்களின் இதயத்தை உருக்குகின்றன. ஸ்ரீதாஸர் இயற்றியிருக்கும் கீர்த்தனைகளின் நடையை கவனித்தால், அவர் மேலும் பற்பல கீர்த்தனைகளை இயற்றியிருக்கலாம் என்றே தோன்றுகிறது.

## ஸ்ரீதாஸரின் பக்தர்கள்

ஸ்ரீமேஷதாஸர், தன்னை நம்பிய பக்தர்களின் அபீஷ்டங்களை நிறைவேற்ற, பல்வேறு மகிமைகளை செய்தார் என்பது அவருடைய வாழ்க்கையிலிருந்து தெரிய வருகிறது.

ஸ்ரீதாஸர் ஸ்ரீஆதிஷிலா க்ஷேத்திரத்தில் இருந்த காலத்தில் பற்பல சிஷ்யர்கள் இருந்தனர். அவர்களில் சிலர், திடீரென்று பாகீரதி யாத்திரைக்கு (காசி யாத்திரை) செல்ல வேண்டும் என்று தீர்மானித்தனர். இதைக் கேட்ட ஸ்ரீதாஸர், எதையும் சொல்லாமல், அமைதியான புன்னகைத்தவாறு இருந்தார். பிறகு ஒரு நாள், சரி கிளம்பலாம் என்று கூற, அன்றிரவு ஸ்ரீதாஸரின் கனவில் பாகீரதி தேவி ப்ரத்யட்சம் ஆகி – நீங்கள் இந்த இடத்திலிருந்து புறப்படுவது, ஸ்ரீஹரியின் சித்தத்திற்கு எதிரானது. ஆகையால், நாளை நானே நீங்கள் இருக்கும் இடத்திற்கு வருகிறேன். எனக்கு இந்த இடம் பிறந்த வீடு ஆகிறது. ஆகவே, பிறந்த வீட்டில் செய்ய வேண்டிய மரியாதை களை நீங்கள் செய்ய வேண்டும்' என்று குறிப்பிட்டாள்.

இதைக் கேட்ட ஸ்ரீதாஸர் மிகவும் மகிழ்ந்து, உடனடியாக எழுந்து, தம் வீட்டிலிருந்து தேவாலாயத்தின் வரை உள்ள பாதையில் சுண்ணாம்பு தடவி, பூக்களால், தோரணங்களால் அலங்காரங்களை செய்து, ரங்கோலிகளை போட்டு தயாராக இருந்தார். சிறந்த புடவைகள், ரவிக்கைகள், முறத பாகிண, பற்பல மங்கள திரவியங்கள் ஆகியவற்றை தயாராக வைத்திருந்தார். மற்றும் பிராமண ஸமாராதனெகளை செய்து, அனைவரையும் திருப்திப்படுத்தினார்.

இதனைக் கண்ட அனைவரும், ஸ்வாமி இதையெல்லாம் நீங்கள் ஏன் செய்கிறீர்கள்? என்று கேட்க, ஸ்ரீதாஸரும் சிஷ்யர்களிடம் – இன்று பாகீரதிதேவி, ஸ்ரீகிரீஷாசலபதியின் தரிசனத்திற்கு வருகிறாள். ஆகையால், அவருக்கு இப்படிப்பட்ட மரியாதைகளை செய்ய வேண்டும் – என்று கூறுகிறார்.

இதனைக் கேட்ட சிலர் அமைதியாக இருந்தனர். ஞானஶூன்யரான சிலர், இவர் செய்வது நகைச்சுவையாக இருக்கிறது என்று கேலி பேசினர். இவ்வாறாக, அனைவரும் தங்களின் யோக்யதைக்கேற்ப இதனை புரிந்து கொண்டனர்.

அன்று மதிய நேரம். தேவாலயத்தின் பூஜைகள் தினப்படியே நடந்து முடிந்தது. கதவைப் பூட்டி, சாவியை ஸ்ரீதாஸரிடம் கொண்டு வந்து கொடுத்துவிட்டுச் சென்றனர். பிறகு, ஸ்ரீதாஸர் அங்கிருந்த வாத்தியக்காரர்களை வாத்தியம் வாசிக்கக் கூறினார். வாங்கி வைத்திருந்த முறத பாகிண முதலான பொருட்களை தம் சிஷ்யர்களை எடுத்து வரச் சொன்னார். இவ்வாறாக அனைவரும் ஸ்ரீகிரீஷாசலபதியின் ஆலயத்தில் திரண்டனர். தேவாலயத்தில் வெளிப்புறச் சுவரில் தோன்றிய பரிசுத்தமான கங்கா நீரானது, அந்த தேவாலயம் முழுக்க பரவி, ஸ்வாமியின் துடை வரையில் ஏறத் துவங்கியது. இதனைக் கண்ட மக்கள் அனைவரும் மிகவும் வியந்து, கங்கா ஸ்தோத்திரம் மற்றும் ஸ்ரீஸத்யதர்ம தீர்த்த ஸ்வாமிகளால் இயற்றப்பட்ட கங்கா லஹரி ஆகியவற்றை ஸ்தோத்திர பாராயணம் செய்யத் துவங்கினர். ஸ்ரீதாஸர், பாகீரதி பூஜையை செய்து, மொறத பாகிண கொடுத்து, பழ சமர்ப்பணம், மஹா மங்களாரத்தி, மந்த்ரபுஷ்ப ஆகியவற்றை செய்தார். அனைவரும் இந்த கங்கா நீரை, ப்ரோக்ஷணம் செய்து கொண்டு, ஆசமனம் செய்தனர்.

இந்த அற்புத உற்சவம் ஆனபிறகு, ஸ்ரீதாஸர், தம் கையில் இருந்த பஞ்சபாத்திரத்தில் அந்த புனித நீரினை நிரப்பிக் கொண்டு, மறுபடி தேவாலயத்தை பூட்டிக் கொண்டு, தம் சத்திரத்திற்கு வந்து, பிராமண ஸந்தர்ப்பணையை செய்தார். அதைப் போலவே, அனைவரும்கூட தத்தம் பாத்திரங்களில் அந்த புனித நீரினை நிரப்பிக் கொண்டு, தேவாலயத்திற்கு வந்தனர். ஆனால், இங்கு வந்து, போஜனத்திற்கு அமரும்போது பார்த்தால், யாருடைய பாத்திரத்திலும் தண்ணீரே இருக்க வில்லை. ஸ்ரீதாஸரின் பாத்திரத்தில் மட்டும் அந்த புனித நீர்

நிரம்பியிருந்தது. சரி மறுபடி சென்று கங்கை நீரினை பிடித்துக் கொண்டு வருவோம் என்று சென்றால், அந்த தேவாலயத்தில் தண்ணீர் வந்ததற்கான அறிகுறியே இருந்திருக்கவில்லை. இந்த சம்பவத்தாலும் அனைவரும் ஸ்ரீதாஸரின் மகிமையை அறிந்தனர்.

நம்பித த்விஜரிகெ ஷம்போர்கிரியல்லி தாஸராய
பாம்பொளெ தோரிஸி ஸம்ப்ரமகொளிஸிதி தாஸராய

என்று ஷ்யாம ஸுந்தர தாஸர், தாஸராயரைக் குறித்தான 'போஷிஸு எம்மனு தோஷகளெணிஸதெ' என்னும் கீர்த்தனை ஒன்றில் இந்த சம்பவத்தை சொல்லியிருக்கிறார்.

மூன்று ஆண்டு காலங்கள் ஸ்ரீதாஸர் செய்த தவத்தினால், ரங்க க்ஷேத்திரத்தில் நிலைத்திருப்பவனான பத்மனாப ஸ்வாமியை மகிழ்வித்தார். இந்த தவம் / உபவாசம் காஷ்ட மௌன விரதத்தை கொண்டதாகும். இந்த விரதத்தில், போஜனம் இன்றி, நாளொன்றுக்கு மாலையில் வெறும் 5 கர்ஜூரங்களை பொடி ஆக்கி, அதை தயிரில் கலக்கி, நைவேத்தியம் செய்து, அதனை ஏற்றுக் கொண்டிருந்தார். இப்படியான ஒரு கடும் தவத்தினை, ஸ்ரீஸ்ரீனிவாஸ தேவாலயத்திலிருந்து ஒரு மைல் தூரத்தில் இருக்கும் மலையில் ஒரு சிறிய தேவாலயத்தில் அமர்ந்து மூன்று ஆண்டுகள் வரை ஸ்ரீதாஸர் செய்தார். ஆனாலும், அவருடைய அன்ன சத்திரத்தில் தினமும் நூற்றுக் கணக்கான பிராமணர்களுக்கு ஸந்தர்பணம் நடைபெற்று வந்தது.

ஒரு நாள், தாஸராயரின் இரண்டாம் மனைவியின் தாயார், கிராமத்திலிருந்து வந்தவராகையால் 'சம்சாரம் செய்யாமல், மலையில் சென்று தவம் செய்பவருக்கு என் மகளை திருமணம் செய்து கொடுத்துவிட்டேனே' என்று புலம்பிய வாறு, தன் மகளை அழைத்துக் கொண்டு, ஸ்ரீதாஸர் இருந்த மலைக்குச் சென்று, அங்கும் சென்று புலம்பியவாறு, கலாட்டா

செய்யத் துவங்கினார். ஸ்ரீதாஸரோ, மௌன விரதத்தில் இருந்ததால், தன் மனைவியை அங்கேயே ஒரு இடத்தில் அமர்ந்து ஓய்வு எடுக்கச் சொன்னார். அவர் அப்படி படுத்ததும், ஒரு பெரிய பாம்பு வந்து அவரின் தேகம் முழுவதும் சுற்றிக் கொண்டு, அவர் தலை மேல் படம் எடுத்து நின்றது. இதைக் கண்ட அவரது தாயார் பதறி மீண்டும் ஸ்ரீதாஸரிடம் வந்து புலம்பியவாறு விஷயத்தை கூறினார். ஸ்ரீதாஸரின் மனைவியோ, ஸ்ரீதாஸரின் மகிமைகளை அறிந்திருந்தபடியால், தன் தாயாரை சமாதானம் செய்து, மறுபடி ஊருக்கு அழைத்து வந்தார்.

இந்த காஷ்ட மௌனம் முடிந்தபின், ஒரு நாள், மதிய காலத்தில் அந்த சத்திரத்தில் அனேக பிராமணர்கள் அமர்ந்திருந்தபோது, திடீரென்று அங்கு இருந்த ஒரு தீர்த்த தட்டு குதித்து ஆடத்துவங்கியது. ஸ்ரீதாஸரும் வியப்படைந்த தைப் போல காட்டிக் கொண்டு, அந்த தட்டின் கீழ் என்ன இருக்கிறது என்று பாருங்கள் என்றார். அதைப் போல அனைவரும் பார்க்கையில், அங்கு ஒரு ஹனுமந்த தேவரின் சிலை இருந்தது. இதே ஹனுமந்த தேவரை ஸ்ரீதாஸர், தரூரு பார்த்தஸாரதி ஸ்வாமி ஸன்னிதியில் ப்ரதிஷ்டை செய்தார்.

ஒரு முறை, ஸ்ரீஉத்தராதி மடத்து அன்றைய பீடாதிபதியாக இருந்த, ஸ்ரீஸத்யவீர தீர்த்த ஸ்ரீபாதங்களவர், யளமேலி விட்டலாசார்யருக்கு, கௌரவம் செலுத்தும் விதமாக, அவரை சிஞ்சோளி கிராமத்தில் ஒரு பல்லக்கில் அமரச்செய்து, நகர்வலம் செய்வித்தார். பிறகு, ஆசார்யர், ஒரு குதிரையில், கத்வால் செல்லும் பயணத்தில், தரூர் வழியாக சென்றார். அப்போது ஸ்ரீஷேஷதாஸர், இவ்வாறாக ஆசார்யருக்கு மடாதீசரால் கிடைத்த கௌரவம் மற்றும் அவர் தரூர் வழியாக கத்வால் செல்லும் விஷயம் அனைத்தையும், தன் ஞான த்ருஷ்டியால் அறிந்தார்.

உடனடியாக ஒரு பிராமணரை அவரிடம் அனுப்பி, உங்களுக்காக ராய்ச்சூரில் ஒரு பல்லக்கு தயார் செய்து வைத்திருக்கிறேன். ஸ்வாமிகளால் கௌரவிக்கப்பட்ட தாங்கள், அதில் ஏறி, நம் ஊர் வழியாக செல்ல வேண்டும் என்று வேண்டுகோள் வைத்தார். ஆசார்யரும் அதன்படியே செய்ய, இன்று ஸஜ்ஜனர்களின் ஸங்கம் ஆனது என்று ஸ்ரீதாஸர் அவரிடம் சொல்லி மகிழ்ந்தார்.

ஸ்ரீதாஸரின் கனவில் ஸ்ரீலட்சுமிதேவியே வந்து, இவரை புத்ரத்வேன அங்கீகரித்து அருளினார். இந்த விஷயத்தைப் பற்றி ஸ்ரீதாஸர் ஒரு ஸுளாதியில் தெரிவித்திருக்கிறார். அதன் மூலமே இது நமக்குத் தெரிய வருகிறது.

குஷ்டரோக$^{3}$ வ்யாதி$^{4}$ஜ்வர சதுர்த்தி$^{2}$ ப$^{4}$ய பீ$^{4}$திக$^{3}$ளன்னெல்ல
பி$^{3}$ட்டோடி$^{3}$ஸி தீர்த்த$^{2}$ அங்கா$^{3}$ரத$^{3}$ல்லி ஸமஸ்தர மஹிமெய நோடி$^{3}$ |
ஸந்தான ஸம்யுதத ப$^{2}$லவ நிந்து கொடு$^{3}$வ மந்த்ராக்ஷதெய
க்$^{3}$ரந்த பத$^{3}$ஸுளாதி$^{3}$ய லக்ஷ்மீ காந்தகெ$^{3}$ மாட$^{3}$ர்ப்பிஸுவர ||

என்று ஹரபனஹள்ளி பீமவ்வா அவர்கள் இயற்றிய 'ஸ்மரிஸி பதுகிரோ ஸர்வானந்த குருகள' என்னும் கீர்த்தனையின் நுடிகள், ஸ்ரீதாஸர், தம் பக்தர்களின் ஆதிவ்யாதிகளை பரிகரிப்பதற்காக காட்டிய அற்புத மகிமைகளைப் பற்றி பாடியிருக்கிறார்.

இதைப்போலவே, தம்மை நம்பிய பக்தர்கள் அனுபவித்து வந்த துன்பங்களை / பிரச்னைகளை, தனது கரஸ்பர்ஷமான மந்திராட்சதை மூலமாக பரிகரித்த சம்பவங்களும் இருக்கின்றன. இவை அனைத்தும், ஸ்ரீதாஸரைக் குறித்தான ஸ்தோத்திரங்களில் வர்ணிக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீஶேஷதாஸர், தமது 60ம் வயதில், ஸந்தானத்தைப் பெறுவதற்காக, வெங்கம்மா என்பவரை திருமணம் செய்து

கொண்டார் என்று தெரிய வருகிறது. ஸ்ரீதாஸருக்கு, திம்மண்ணா, கோவிந்தப்பா, பீமண்ணா என்னும் மூன்று ஆண் குழந்தைகள் இருந்தனர். அவர்களில், திம்மண்ணாவின் புத்திரனுக்கு, ஸ்ரீதாஸர் 'விஜயராய' என்று பெயர் வைத்தார். தம் விருப்பத்திற்கேற்ப, ஸ்ரீவிஜயராயரே தமக்கு பேரனாக வந்து பிறந்திருக்கிறார் என்று நம்பிய ஸ்ரீதாஸர், அந்த பேரனை 'புண்யாத்மா' என்றே அழைத்து வந்தார். இந்த புண்யாத்மரின் தொட்டிலை ஆட்டச் செய்து, பல்வேறு பக்தர்களின் பிரச்னைகளையும் ஸ்ரீதாஸர் தீர்த்து வைத்தார் என்றும் சொல்கின்றனர்.

## பார்த்தஸாரதியின் பிரதிஷ்டாபனை

ஸ்ரீஶேஷதாஸர் தமது வாழ்க்கையில் செய்த இன்னொரு மகத் காரியம் என்னவென்றால், தம் பிறந்த ஊரான தரூரில் தம் ஆராத்ய தெய்வமான பார்த்தஸாரதியின் திவ்ய மூர்த்தியை பிரதிஷ்டை செய்தார். இதற்காக அனைத்து ஏற்பாடுகளையும் செய்த தாஸர், ஆண்டு 1885 (சக 1807) பார்த்திவ நாம ஸம்வத்ஸரம், சைத்ர யுகாதி நாளில், நூற்றுக்கணக்கான பக்தர்களின் முன்னிலையில், ஸ்வாமியை பிரதிஷ்டை செய்தார். அதே நாளில் புண்யாத்மன் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீதாஸரின் பேரனின் உபநயனமும் ஆனது.

இதன் பின், ஸ்ரீதாஸர், மொதலகல்லிற்கு திரும்பி வந்தார். ஞானிகளான அவருக்கு தம் இறுதிக் காலம் நெருங்கிவிட்டது என்று தெரிய வந்தது. மஹாருத்ரதேவருக்கு தரிசனம் அளித்த ஸ்ரீனிவாஸனின் சேவையிலேயே அதிக காலத்தை கழித்தவாறு, ஸ்ரீதாஸர் அந்தர்முகிகளாக இருந்தார்.

ஸெரகொ$^3$ட்$^3$டி$^3$ பே$^3$டி$^3$கொம்பெ$^3$ முகுத$^1$ன்ன மாடு$^3$வுது$^3$
அரலவவாத$^3$ரு உளிஸுவுது$^3$ ஸல்ல
பரமானுக்$^3$ரஹ மாடு$^3$வுது$^3$ தடி$^3$யத$^3$லெ
பரிவ்யக்தி மாடி$^3$த$^3$ந்த ஶுபகாலவிது$^3$ எம்போ$^3$

ஆஶெயிந்த3 பி3ன்னஹ மாடி3தெ3னோ

என்று பிரார்த்தனை செய்தார். தம் வாழ்க்கையில் நடந்த அனைத்து சம்பவங்களையும் சிந்தித்துக் கொண்டு, அனைத்தையும், குருவின் மூலமாக, ஸ்ரீஹரியின் பாத கமலங்களில் சமர்ப்பித்தார்.

ஸிந்து4 கருணி நினகெ3 நீனெ ஒலிது3 என்ன
த3ந்த4ன மாட3த3லெ த3யதி3 நோடி3
ஸந்த3ருஷனவித்து த்வரிதத3லி நின்ன
மந்தி3ர ஸேருவந்தெ மாடு3வுது3
மந்த3ரத4ர கு3ருவிஜயவிட்டலரேயா
ப3ந்து4 நீனேவெ அன்யா சிந்தெ யாகோ

என்று தம் மனதின் விருப்பங்களை பகவந்தனிடம் சமர்ப்பித்தார். அன்று ஆண்டு 1885 பார்த்திவ சம்வத்ஸர வைசாக சுத்த அஷ்டமி. ஸ்ரீதாஸர், ஸ்ரீனிவாஸனின் சன்னிதானத்தில் லயசிந்தனையை செய்தவாறு, தம் பார்த்திவ சரீரத்தை விட்டு, பரந்தாமத்தை அடைந்தார்.

ஶேஷதாஸரின் நிர்யாணத்திற்குப் பிறகு, மொதலகல்லில் அவருடைய நினைவாக, ஒரு கட்டெ நிர்மாணம் செய்யப் பட்டது. அதற்கு செய்யும் பிரதட்சிணை, நமஸ்காராதி சேவைகளால், பக்தர்களின் அனைத்து விருப்பங்களும் நிறைவேறுகின்றன. ஒவ்வொரு ஆண்டும், அவருடைய பக்த வ்ருந்தத்தினரால், தாஸ ராயரின் சேவை மிகவும் வைபவத்துடன் நடைபெறுகிறது.

ஸ்ரீஶ ஸாதா3ம்பு3ஜாஸக்தம் விரக்த கீர்த்தி ஶோபி4தம் |
ஸுஜனேஶ்டப்ரத3ம் பூர்வம் பார்த்த2 ஶேஷ கு3ரும் ப4ஜே ||

***

ஸ்ரீமத் அக்ஷோப்ய தீர்த்த மடத்தின் பீடாதீஷரான
ஸ்ரீரகுதாந்த தீர்த்த யதிகளால் இயற்றப்பட்ட

## ஸ்ரீ ஶேஷதாஸரின் அஷ்டகம்

(மூலம் மட்டும் - பாராயணத்திற்காக)

**ஸ்ரீஶாங்க்4ரிஸேவகம் நித்யம் பூ4ஸுராக்3ர குலோத்ப4வம் |**
**வாஸமாத்3ரி ஶிலாக்ஷேத்ரம் ஶேஷதா3ஸ கு3ரும் ப4ஜே ||**

**ஸீதாபதிம் ஹரிமஜாதம் ப்ரணம்ய மதிஹேதும் ஸுகா2ய பவனாத்**
**ஜாதம் ப3லாய புருஹூதாவதார ஜயதீர்த்த2ம் த4னார்த்த2மனிஷம் |**
**போ1தம் ஸுதீ4ந்த்3ர கு3ருஜாதம் ததை2வ மம தாதம் ச ஜீவிதக்ருதே**
**க்2யாதஸ்ய ரீதிமனுனீதாம் கரோமி க்ருதிமேதாம் து**
**ஶேஷஸுகு3ரோ: ||1**

**ஸ்ரீபார்த்த2ஸூத3பத3 ஜாபாக்2யமுக்திபத3 ஸோபான**
**மார்க்க3த3கு3ரு:**
**பாபாத்மனாம் நிகி2லதாபாபனோத3னத யாபார ஸௌக்2ய**
**மது3ஹத் |**
**பூ4பால வர்யக்ருத கோபாத் கதா3சித3 யமாபாஶு சிப்பஶிக2ரம்**
**கோ3பாலப4க்த விஜயோபாபி4த4ஸ்ய மஹிமாபூர மஜ்ஜனமதா4த் |2**

**தா3ஸார்யவர்ய கருணாஸாக3ரோபக3த மேஶாங்க்4ரி**
**பத்மமஹிமா**
**லேஶாம்ருதா ப்ரமதிகோஷ ஶசீஶ இவ பா4ஸாபி4னந்த்3ய**
**விபு3தா4ன் |**
**தே3ஶானடன் க2லகுலேஶான் விஜித்ய ரப4ஸாஸாத்4ய**
**ப4க்திப4ரிதோ**
**வ்யாஸார்ய பன்னவபலாஶே நனாம பத1கே3ஶோ யதா2**
**முரஹரம் ||3**

க்ரூராரி து3ஷ்டமதவாராஸி கும்ப4ஸூத மாராத்4ய தத்3வரயுத:
ஸாரம் ஸுசிந்த்ரவலிமாராது3பேத்ய கபிவீரம் ப4ஜன் கதிபயான் |
வாரானுவாஸ கு3ருராராத4யன் ஸுஜனவாரம்
ஸுபோ4ஜ்யத4னதோ
தூ3ரான் பிஶாசபரிவார: ப்ரயாதி க2லு கோ4ரோऽபி
யத்ஸ்மரணத: ||4

ஜம்பா4ரித3ந்திவர த3ம்பா4பஹாரி குச கும்பா4ஞ்சிதேந்த்3வவரஜா
ஸம்போ4க3கால பரிரம்பா4ப்த குங்கும வராம்போ4ருஹாங்க ருசிரம்
அம்போ4ஜனாப4மதி ஸம்பா4வனாய ஜக3த3ம்பாகுமார வசனாத்
கும்பீ4ந்த்3ர க்ருத்தித4ர ஶம்போ4ர்கி3ரிம் ஜனகத3ம்பா3வ்ருதோ
கு3ருகா3த் ||5

ராமம் ரகோ4:குலலலாமம் நிஶாடததிபீ4மம் ப3லாஹக இவ
ஶ்யாமம் ஸதாம் ஸகலகாம ப்ரத3ந்தமிவ ஸோமம் ஸுரோடு3
நிகரே |
ஸ்தௌம்யம்பு3ஜாக்ஷமிதி வாமம் யதா2 ஸுஜனதா4மாஸ்துவன்
ப4க3வத:
ப்ரேமம் ப்ரஸாத்3ய ப3லஸீமம் ஸமீரண மதோ2மா
களத்ரமப4ஜத் ||6

க3ங்கா3ம் கதா3சித3க4ஸங்கா3பஹாரக விஹங்கா3தி4பத்4வஜவரோ
ஸங்கா3வதி4ப்லுத தரங்கா3ன் த3த3ர்ஶ ப4வப4ங்கா3ம் ஜனை:
பரிவ்ருத: |
துங்கோ3பவாஸவ்ரத ர3ங்கா3தி4ப: ஸுஜனஸங்கீ3
ஹரேர்கு3ணக3ணான்
ஸங்கீ3ததோ கத2யத3ங்கீ3சகார ம்ருது3லாங்கீ3 ரமா ஸூத இதி ||7

ஶ்ரீராக4வேந்த்3ர கு3ருமாராத்4ய மாயிதி3திஜாரிம் ததீ3யகருணா
தா4ரோனுபூ4ய ஸுக2ஸாரம் கிரீடிரத2பா4ரம் வஹந்தமத3த4த் |
ஶ்ரீராமவத் க2லகுடா2ரோபனீதி க்ருதிமாராத்3விதா4ய ஸுயஶோ
தூ3ரங்க3தோ பு4வி த3தா4ராத2 நாகி பரிவாரஸ்துதோऽயமப4வத் ||8

**ஸ்ரீஶேஷவர்ய ஹரிதா³ஸாக்³ரணேஶ்சரித மாஶம்ஸிதம் யலமளௌ**
**வாஸஸ்ய விட்டலக்ருதீஶஸ்ய பூர்ணகருணாஶாவதாஹ்ய ஹரக: |**
**ஸ்ரீஸ்ரீனிவாஸ ஸுகவீஶேன பாட²மனு மேஶோ த³தா³தி ஸுஸுதம்**
**வாஸோ த⁴னம் ச ஸுயஶ: ஶோபனம் ஸுக²மஶேஷ: ஶ்ருதிஸ்ம்ருதிகதிம் ||9**

***

ஸ்ரீமத் அக்ஷோப்ய தீர்த்த மடத்தின் பீடாதீஷரான ஸ்ரீரகுதாந்த தீர்த்த யதிகளால் இயற்றப்பட்ட

## ஸ்ரீ ஶேஷதாஸரின் அஷ்டகம்

(தமிழில் அர்த்த விளக்கங்களுடன்)

**ஸ்ரீஶாங்க்⁴ரிஸேவகம் நித்யம் பூ⁴ஸுராக்³ர குலோத்ப⁴வம் |**
**வாஸமாத்³ரி ஶிலாக்ஷேத்ரம் ஶேஷதா³ஸ கு³ரும் ப⁴ஜே ||**

**ஸீதாபதிம் ஹரிமஜாதம் ப்ரணம்ய மதிஹேதும் ஸுகா²ய பவனாத் ஜாதம் ப³லாய புருஹூதாவதார ஜயதீர்த்த²ம் த⁴னார்த்த²மனிஷம் | போ¹தம் ஸுதீ⁴ந்த்³ர கு³ருஜாதம் ததை²வ மம தாதம் ச ஜீவிதக்ருதே க்²யாதஸ்ய ரீதிமனுனீதாம் கரோமி க்ருதிமேதாம் து ஶேஷஸுகு³ரோ: ||1**

ஸீதாபதிம் – சீதாபதியான; ஆஜாதம் – உற்பத்தி இல்லாதவனான; மதிஹேதும் – ஞானத்திற்கு காரணனான; ஹரிம் – ஸ்ரீஹரியை; ப்ரணம்ய – வணங்கி; ஸுகாய – சுகத்திற்காக; பவனாத் – வாயுதேவரால்; ஜாதம் – பிறந்தவரான ஆஞ்சனேய தேவரை; பலாய – வலிமைக்காக; புருஹூதாவதார ஜயதீர்த்தம் – இந்திரதேவரின் அவதார ரூபரான ஸ்ரீஜயதீர்த்த ஸ்ரீபாதரையும்; தனார்த்தம் – தன செல்வத்திற்காக; அனிஷம் – எப்போதும்; ஸுதீந்த்ர குருஜாதம் – ஸ்ரீஸுதீந்த்ர தீர்த்த

ஸ்ரீபாதரின் கரகமல ஸஞ்சாதரான; போதம் – ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளையும்; ததைவ – அப்படியே; ஜீவிதக்ருதே – ஆயுள் வ்ருத்திக்காக; மம – எம்முடைய; தாதம் ச – முன்னோர் களையும்; ப்ரணம்ய – வணங்கி; க்யாதஸ்ய – புகழ் பெற்றவரான; ஶேஷகுரோ: – ஸ்ரீஶேஷ தாஸர் என்னும் குருகளின்; ரீதிம் – நடவடிக்கைகளுக்கு; அனுனீதாம் – பத்தனான (கட்டுப்பட்டவனான); ஏதாம் – இந்த; மம – என்; க்ருதிம் – கிருதியை; கரோமி – செய்கிறேன்.

ஸீதாதேவியின் பதியான, பிறப்பு இறப்பு ஆகியவை இல்லாதவனான, ஞானத்திற்கு காரணனான, ஜீவாந்தர்கதனான பரமாத்மனை வணங்கி, சுகத்திற்காக எப்போதும் ஸ்ரீஸுதீந்திர தீர்த்தரின் குமாரரான ஸ்ரீராகவேந்த்ர ஸ்வாமிகளை, ஆயுள் வ்ருத்திக்காக முன்னோர்களை வணங்கி, இந்த என் கிருதியை புகழ்பெற்றவரான ஸ்ரீஶேஷாக்ய குருகளின் நடவடிக்கைகளுக்கு அனுசரித்து அவரது ஜீவன சரித்திரத்தை சொல்ல முயல்கிறேன்.

**ஸ்ரீபார்த்த²ஸூத³பத³ ஜாபாக்²யமுக்திபத³**
**ஸோபானமார்க்க³த³கு³ரு:**
**பாபாத்மனாம் நிகி²லதாபாபனோத³னத யாபார ஸௌக்²ய**
**மது³ஹத் ।**
**பூ⁴பால வர்யக்ருத கோபாத் கதா³சித³ யமாபாஸ்ய சிப்பஶிக²ரம்**
**கோ³பாலப⁴க்த விஜயோபாபி⁴த⁴ஸ்ய மஹிமாபூர**
**மஜ்ஜனமதா⁴த் ।।2**

ஸ்ரீபார்த்தஸூத = அர்ஜுனனின் ஸாரதியான ஸ்ரீகிருஷ்ணனின்; பதஜாபாக்ய – பத மந்திரன் என்று பெயர் உள்ள; முக்தி பதஸோபான – மோக்ஷஸாதனத்தின்; மார்க்கதகுரு – வழியைக் காட்டுபவரான குருகளான ஸ்ரீஶேஷதாஸர்; பாபாத்மனாம் – பாபாத்மரான மக்களின்; நிகிலதாபாபனோ தன தயா – பற்பல விதமான தாபத்ரய (ஆத்யாத்மிக, ஆதிதெய்விக மற்றும் ஆதிபௌதிக) ஆகியவற்றை களைவதன் மூலம்;

ஆபாரஸௌக்யம் – இஹ பர ஸாதகமான மனோரதங்களை; அதுஹத் – கொடுக்கிறாரோ; அஹம் – அத்தகைய குருகள்; கதாசித் – ஒரு முறை; பூபால வர்யக்ருதகோபாத் – அரசனின் கோபத்திற்கு ஆளாகி; ஆஷு – உடனே; சிப்பஷிகரம் – சிப்பகிரியை; ஆப – சென்று அடைந்தார். மற்றும், அங்கு; கோபாலபக்த விஜயோபாபிதஸ்ய – ஸ்ரீவேணுகோபால ஸ்வாமியின் அந்தரங்க பக்தரான ஸ்ரீவிஜயதாஸர் என்னும் ஸஜ்ஜனரின்; மஹிமாபூரமஜ்ஜனம் – மகிமைகள் என்னும் பிரவாகத்தில் அவகஹன ஸ்னானத்தை; அதாத் – செய்தார்.

அர்ஜுனனின் ஸாரதியான ஸ்ரீகிருஷ்ணனின் பதங்கள் எனப்படும் நாம மந்திர ஜபத்தை செய்பவர்களுக்கு, பகவந்தன் அனைத்து வித மங்களங்களையும் அருள்கிறான் என்பது கருத்து. இப்படிப்பட்ட நல்ல முக்திக்கான மார்க்கத்தை ஸஜ்ஜனர்களுக்கு கொடுப்பவரான இந்த குருகள், பாபாத்மரான பாமர மக்களின் பற்பலவிதமான தாபத்ரயங்களை களைந்த வாறு, அபாரமான ஸௌக்கியத்தை அருள்கிறார். அதாவது, அஞ்ஞான காலத்தில், ஸம்ஸார காலத்தில், ஸ்வரூபத: இவர் பெரியவரான காரணத்தால், பூர்வ ஸம்ஸ்காரத்தினால் அந்த கிராமத்து மக்களுக்கும், உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும், அனைவருக்கும், பகவத் பக்தி உண்டாகுமாறு, ஸ்ரீஹரியின் சரித்திரங்களை போதித்தவாறு, அவர்களுக்கு வரக்கூடியதான ஸம்ஸாராதி துக்கங்களை களைந்து, இஹபர ஸாதகமான ஸன்மார்க்கங்களை அவர்களுக்கு காட்டியவாறு, அனைவரின் மனோரதங்களை நிறைவேற்றிக் கொண்டிருந்தார். ஸ்ரீதாஸர் ஆகர்ப்ப (முதலிலிருந்தே) பகவத் பக்தர். பகவந்தனின் நாம ஸங்கீர்த்தனத்திலேயே எப்போதும் ஈடுபட்டிருப்பவர் மற்றும் அனைவரின் நலன்களையும் விரும்புபவர்.

**தா[3]ஸார்யவர்ய கருணாஸாக[3]ரோபக[3]த மேஶாங்க்[4]ரி**
**பத்மமஹிமா**
**லேஶாம்ருதா ப்ரமதிகோஷ ஶசீஶ இவ பா[4]ஸாபி[4]னந்த்[3]ய**
**விபு[3]தா[4]ன் |**

**தே[3]ஶானடன் க[2]லகுலேஶான் விஜித்ய ரப[4]ஸாஸாத்[4]ய ப[4]க்திப[4]ரிதோ**
**வ்யாஸார்யபன்னவபலாஶே நனாம பத[1]கே[3]ஶோ யதா[2] முரஹரம் ||3**

தாஸார்யவர்ய - தாஸஸ்ரேஷ்டரான, ஸ்ரீகோபாலதாஸரே முதலான அனைவரைவிடவும் ஸ்ரேஷ்டரான ஸ்ரீவிஜய தாஸரின்; கருணா ஸாகரோபகத - கருணைக் கடலால் அடையப்பட்ட; மேஷாங்க்ரி பத்ம மஹிமா – ஸ்ரீலட்சுமிபதி யான ஸ்ரீஹரியின் பாதபத்மங்களின் மகிமையின்; லேஷாம்ருத - லேஷ என்னும் அமிர்தத்தினால்; ஆப்த - அடையப்பட்ட; மதிகோஷ: பகவத் விஷயஞானம் என்னும் செல்வம் உள்ள ஸ்ரீஶேஷதாஸர்; ஷசீஷ: இவ - சசிபதி இந்திரனைப் போல; விபுதான் - பண்டிதர்களை; பாஷா - ஞானத்தின் ஒளியினால்; அபினந்த்ய - மகிழ்ச்சிப்படுத்தி; ரபஸ - சீக்கிரமாக; தேஷான் அடன் - தேச சஞ்சாரத்தை செய்தவாறு; கலகுலேஷான் – துர்வாதிகளை; விஜித்ய - வென்று; அஸாத்யபக்திபரித – மற்றவர்களுக்கு அஸாத்தியமான ஸ்ரேஷ்ட பக்தி உள்ளவரான இவர்; வ்யாஸார்யபன்னவபலாஷே - ஸ்ரீவ்யாஸ ராயரின் பாதம் என்னும், தாமரை போன்ற பாதங்களில்; யதா - முன்பு எப்படி இருந்ததோ; பதகேஷ: - கருடன்; முரஹரம் - ஸ்ரீகிருஷ்ணனை பக்திபூர்வகமாக எப்படி வணங்கினானோ, அப்படி; பக்திபரித - பக்தியுடன்; நனாம - வணங்கினார்.

பகவத் தாஸர்களில் ஸ்ரேஷ்டரான, ஸ்ரீகோபாலதாஸரே முதலானவர்களில் சிறந்தவரான ஸ்ரீவிஜயதாஸரின் கருணை என்னும் பாற்கடலின் உதவியால், மற்றும், ஸ்ரீலட்சுமிபதியின் பாத பத்ம மகாமகிமையின் லேஷ என்னும் அமிர்தத்தினால் அவரை அடைந்தவரான, பகவத் விஷயக ஞானம் என்னும் களஞ்சியத்தைக் கொண்டவரான ஸ்ரீஶேஷதாஸர், தேவேந்திரனைப் போல அறிஞர்களை தம் ஒளியினால் மகிழ்ச்சிப்படுத்தி, அனேக தேசங்களில் சஞ்சரித்து, அங்கங்கு இருந்த பற்பல வித்யார்த்திகளை ஸித்தாந்த வசனங்களின்

உதவியால் அவரகளை வென்று, பக்திபூர்வகமாக நவ விருந்தா வன கட்டெயில் இருந்த ஸ்ரீவ்யாஸராஜரின் ஆராத்யமான பாத பத்மங்களை, முன்பு கருடன் எப்படி ஸ்ரீகிருஷ்ணனை வணங்கினானோ அதைப் போல வணங்கினார்.

இப்படியாக துர்வாஸரின் சாபத்தினால், தேவேந்திரன் பாற் கடலிலிருந்து தனக்கு கிடைத்ததான அமிர்தத்தினால் மற்றும் விபூதியினால் கிடைத்ததான ஒளியினால் பற்பல இடங்களை மகிழ்ச்சிப்படுத்தி, பாற்கடலின் தீரத்தில் இருந்த அனேக இடங்களில் இருந்த கோர தைத்யர்களை போரில் வென்று, பக்தியுடன் அஜித நாமக பரமாத்மனுக்கு வணங்கியதைப் போல, மற்றும் கருடன் கிரீடத்தை கவர்ந்த பலியை வென்று, பர்வதத்தில் இருந்த ஸ்ரீகிருஷ்ணனுக்கு கிரீடத்தை அர்ப்பித்து வணங்கியதைப் போல, இந்த ஸ்ரீதாஸர் அஷ்வத்தாமாதிகளின் உல்லங்கனத்தினால் கிடைக்காததான அறிவினை, ஸ்ரீவிஜய தாஸரின் பாதசேவை என்னும் மதனத்தினால் அவருடைய அருள் என்னும் பாற்கடலிலிருந்து தமக்கு கிடைத்ததான பகவத் விஷயக ஸ்வரூப ஞானத்தினால், அற்புதமான ஞானிகளை மகிழ்ச்சிப்படுத்தி, பற்பல துர்மதத்தை சேர்ந்தவர் களின் தேஜஸ்ஸினை அடக்கி, இப்படியாக அறிஞர்களின் அருளைப் பெறுவதற்காக நவவ்ருந்தாவனத்தில் இருப்பவரான ஸ்ரீசந்திரிகாசார்ய ப்ரபுகளின் சேவையை செய்யத் துவங்கினார்.

**க்ரூராரி து$^{3}$ஷ்டமதவாராஸி கும்ப$^{4}$ஸூத மாராத்$^{4}$ய தத்$^{3}$வரயுத:**
**ஸாரம் ஸுசிந்த்ரவலிமாராது$^{3}$பேத்ய கபிவீரம் ப$^{4}$ஜன் கதிபயான் |**
**வாரானுவாஸ கு$^{3}$ரூராராத$^{4}$யன் ஸுஜனவாரம்**
**ஸுபோ$^{4}$ஜ்யத$^{4}$னதோ**
**தூ$^{3}$ரான் பிஶாசபரிவார: ப்ரயாதி க$^{2}$லு கோ$^{4}$ரோऽபி யத்**
**ஸ்மரணத: ||4**

க்ரூராரி – க்ரூரரான மாயாவாதிகளின்; துஷ்டமத – துஷ்ட மான ஸித்தாந்த என்னும்; வாராஸி – கடலுக்கு; கும்ப் ஹஸூதம் – கும்பஸம்பரான அகஸ்த்ய முனிவரைப் போல

இருக்கும் சந்த்ரிகாசார்யரை; ஆராத்ய – வணங்கி; தத்வயயுத: – அவரால் அருளப்பட்டு; ஸுசிந்த்ரவலிம் – கிருஷ்ணா தீரத்தில் இருக்கும் புகழ்பெற்ற சிந்தரவேலி க்ஷேத்திரத்தை; ஆராத் – விரைவாக; உபேத்ய – அடைந்து; கபிவீரம் – அந்த க் ஷேத்திரத்தின் அதிதெய்வமான, வ்யாஸராஜரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டதான ஹனுமந்த தேவரை; பஜன் – ஆராதிப்ப வராக; குரு: – குருகளான ஸ்ரீஶேஷதாஸர்; கதிபயான் வாரான் – சில காலம்; உவாஸ – அங்கு வசித்தார்; யட்ஸ்மரணத: – எந்த குருகளின் ஸ்மரணையால்; கோர: – அதிபயங்கரமாக; பிஷாசபரிவார அபி – பிசாசுகளின் சமூகம்; தூராத் – தூரத்திலிருந்தே; ப்ரயாதி – பிரயாணம் செய்கிறதோ என்று; குரு: – குருகளான ஸ்ரீதாஸர்; ஸுஜனவாரம் – ஸஜ்ஜனர்களின் சமூகத்தினை; ஸுபோஜ்யதனத: – அன்ன, வஸ்த்ர, தன, கனகாதிகளால்; ஆராதயன் – மகிழ்ச்சிப்படுத்துவதற்காக; உவாஸ – அந்த க்ஷேத்திரத்திலேயே வசித்தார்.

க்ரூரர்களான மாயாவாதிகளின் துஷ்டவாத துர்மத என்னும் கடலுக்கு, அகஸ்த்யர் போல இருப்பவரான சந்த்ரிகாசார்யரை (அகஸ்யர் கடலினை குடித்ததைப் போல, சந்த்ரிகாசார்யர் ந்யாயாம்ருத, சந்த்ரிகாதி கிரந்தங்களை நிர்மாணம் செய்து, அத்வைத மதத்தினை நிர்மூலம் செய்தார்) ஆராதனை செய்து, அவர்களிடமிருந்து வரங்களை பெற்று, கிருஷ்ணா நதிதீரத்தில் இருக்கும், மிகச் சிறந்ததான சிந்த்ரவேலி க்ஷேத்திரத்தை நோக்கி, மிகவும் விரைவாக வந்து, சந்த்ரிகாசார்யரால் பிரதிஷ்டை செய்யப்பட்டதான ஸ்ரீப்ராணதேவரை, பஜித்தவாறு சில காலத்தை அங்கு கழித்தார்.

**ஜம்பா4ரித3ந்திவர த3ம்பா4பஹாரி குச கும்பா4ஞ்சிதேந்த்3வவரஜா**
**ஸம்போ4க3கால பரிரம்பா4ப்த குங்கும வராம்போ4ருஹாங்க ருசிரம்**
**அம்போ4ஜனாப4மதி ஸம்பா4வனாய ஜக3த3ம்பாகுமார வசனாத்**
**கும்பீ4ந்த்3ர க்ருத்தித4ர ஶம்போ4ர்கி3ரிம் ஜனகத3ம்பா3வ்ருதோ கு3ருரகா3த் ||5**

குரு: - குருகளான ஸ்ரீஶேஷதாஸர்; ஜம்பாரிதந்திருவ - ஜம்பாஸுரனின் வைரியான தேவேந்திரனின் சிறந்ததான ஐராவதத்தின்; தம்பாபஹாரி - கும்பஸ்தளத்தின் கர்வத்தை அபகரிக்கும்; குசகும்பாங்கித - குசகள் என்னும் கும்பகளால் ஒளிரும்; இந்த்வவரஜா - ஸ்ரீலட்சுமிதேவியின்; ஸம்போககால - விஷய ஸுக போக காலத்தின்; பரிரம்பாப்த – ஆலிங்கனத்தால் வந்த; குங்குமவராபோருஹாங்க - குங்கமத்தினால் ஆன கமலத்தின் சின்னத்தினால்; ருசிரம் - அழகான; அம்போஜனாபம் - கமலனாபனான ஸ்ரீமன் நாராயணனை, அதிஸம்பவாய - வணங்குவதற்காக; ஜகதம்பாகுமாரவசனாத் – ஜகத்மாதையான ஸ்ரீலட்சுமிதேவியின் புத்திரரான ஸ்ரீப்ராண தேவரின் ஆணைக்கேற்ப; கும்பீந்த்ர க்ருத்திதர ஷம்போ: - கஜ சர்மாம்பரதாரியான ஸ்ரீருத்ரதேவரின்; கிரிம் - இருப்பிடமான மொதலகல்லு என்னும் கிராமத்தை; ஜன கதம்பாவ்ருத: - ஸஜ்ஜனர்களின் சமூகத்தினால் கூடியவராக; அகாத் - அடைந்தார்.

ஸ்ரீஹனுமந்த தேவரின் ஆணைப்படி, ஸ்ரீவெங்கடேஷ ஸ்வாமியின் சேவையை செய்வதற்காக வந்ததைப் பற்றி சொல்கிறார் - ஜம்பாஸுரனின் எதிரியான தேவேந்திரனின் கர்வத்தை அபகரிக்கும், கும்பஸ்தளத்தில் அலங்காரத்திற்காக எழுதப்பட்ட கேஸர பத்மம் உள்ள ஸ்ரீலட்சுமி தேவியரின் ஸம்போக காலிக ஆலிங்கனத்தில் ஹ்ருதயத்தில் இருப்பதான குங்கும கந்தத்தின் உத்தமமான கமல சின்னத்தினால் மிகவும் அழகானவனான கமலனாபனின் சேவையை செய்வதற்காக, ஜகன்மாதையான ஸ்ரீலட்சுமி தேவியின் வரகுமாரரான ப்ராண தேவரின் ஆணைப்படி கஜசர்மாம்பர தாரியான ருத்ரதேவரின் கிரி எனப்படும் மொதலகல்லு கிராமத்தைக் குறித்து, பல்வேறு மக்களுடன் சேர்ந்து, இந்த குருகள் வந்தார்.

**ராமம் ரகோ4:குலலலாமம் நிஶாடததிபீ4மம் ப3லாஹக இவ**
**ஶ்யாமம் ஸதாம் ஸகலகாம ப்ரத3ந்தமிவ ஸோமம் ஸூரோடு3**
**நிகரே |**

**ஸ்தௌம்யம்பு3ஜாக்ஷமிதி வாமம் யதா2 ஸுஜனதா4மாஸ்துவன் ப4க3வத:**
**ப்ரேமம் ப்ரஸாத்3ய ப3லஶீமம் ஸமீரண மதோ2மா**
**களத்ரமப4ஜத் ||6**

ரகோ:குலலலாமம் – ரகு குலத்திற்கு அலங்காரபூதனான; நிஷாடதிபீமம் – நிஷாசரரான அசுரர்களின் சமூகத்திற்கு பயங்கரனான; பலாஹக இவ – மேகத்தை போல; ஷ்யாமம் – நீலவர்ணனான; ஸதாம் – ஸஜ்ஜனர்களுக்கு; ஸகலகாமப்ரதம் – அனைத்து மனோரதங்களையும் அளிக்கும்; ஸுரோடு நிகரே – தேவதைகள் என்னும் நட்சத்திர சமூகத்தில்; ஸோமம் இவ – சந்திரனைப் போல இருக்கும்; ராமம் – ஸ்ரீராமசந்திர தேவரை; வாமம் – சுந்தரனான; அம்புஜாக்ஷமிவ – ஸ்ரீனிவாஸன் என்று; ஸ்தௌமி – ஸ்தோத்ரம் செய்கிறேன். இதனால், ஸுஜனதாமா – ஸஜ்ஜனர்களுக்கு ஆஸ்ரயமான; பகவத: – ஸ்ரீமன் நாராயணனின்; ப்ரேமம் – அருளை; ப்ரஸாத்ய – அடைந்து; பலஶீமம் – மகா பலசாலியான; ஸமீரணம் – வாயு தேவரையும்; ஸ்துவன் – ஸ்தோத்திரம் செய்பவராக; அத – பிறகு; உமாகளத்ரம் – ருத்ரதேவரையும்; அபஜத் – வணங்கினார்.

ரகுகுலத்திற்கு அலங்காரபூதனான, நிஷாசரரான ராட்சச சமூகத்திற்கு பயங்கரனான, நீலமேக ஷ்யாமனான, ஸஜ்ஜனர்களின் ஸகல மனோரதங்களையும் நிறைவேற்று பவனான, தேவாக்ய நட்சத்திர சமூகத்தில் சந்திரனைப் போல இருப்பவனான, ஸ்ரீராமசந்திரனை, இந்த கிரீஷாசல பதியான ஸ்ரீனிவாஸாபின்னன் என்று தியானம் செய்து, அவனின் அழகினை வர்ணித்து, ஸ்தோத்திரம் செய்து, ஷட்குணை ஸ்வர்ய ஸம்பன்னனான ஸ்ரீஸ்ரீனிவாஸ தேவரின் பரமானுக்கிரகத்தை வேண்டி, (அதாவது, அபரோக்ஷத்தை வேண்டி), நிரவதிக பலசாலியான வாயுதேவரையும் பஜனை செய்தார் (சேவை செய்தார்.

இந்த ஸ்லோகத்தின் அர்த்தம் என்னவென்றால், பரமாத்ம னுக்கு அனந்தானந்த ரூபங்கள் இருக்கின்றன. அனைத்தும் கருட வாகனங்களே. இரு ரூபங்கள் மட்டும் வாயுவாகனங்கள். ஒன்று ஜீவாந்தர்கதனான பரமாத்மன்; தேகம் விட்டு போகும் காலத்திற்கு வாயுவாகனனாக செல்கிறான். இரண்டாவது ரூபம் ராமசந்திரதேவர். ருத்ரதேவரின் மூலம் தாரகோபதேசம் ஆனபிறகு, அனிருத்த தேகம் லிங்கதேகத்துடன் சேர்ந்து, வைஷ்வானர உலகத்தில் தக்தம் ஆகிறது. பிறகு, பிரம்மோப தேசத்தினால் விரஜா நதியை கடக்கிறது. இதுவே சம்பிரதாயமாக இருக்கிறது. ஆகையால், இந்த ராமசந்த்ர தேவரே, தேஹேந்திரியாபிமானி தேவதைகளுக்கு விஶேஷ பலத்தினை கொடுத்து, ஸுஜீவர்களின் மூலமாக சேவையை ஏற்றுக் கொண்டு, அவர்களுக்கு விருப்பப்பட்ட அபரோக்ஷ ஞானத்தை கொடுக்கிறார். ஆகையால், பிம்பாதி அனந்த ரூபாபின்னத்வேன, ஸ்ரீருத்ராசல ஸ்ரீனிவாஸனின் சேவையை செய்து, அபரோக்ஷத்தை சம்பாதித்தார் என்று சொல்லும் நோக்கத்தில், பரோக்ஷமாக ராமாபின்ன ஸ்ரீனிவாஸனின் சேவை செய்யுங்கள் என்று சொல்கிறார்.

இன்னொரு காரணம் என்னவென்றால், தேவேந்திரனுக்கு குருகள் ருத்ரதேவர். ஆனாலும், அனைவரும் குர்வந்தர்கதனை உபாஸனை செய்ய வேண்டும் என்னும் சம்பிரதாயம் இருப்பதால், ருத்ரதேவர் ராம உபாஸகர் ஆன காரணத்தால், ருத்ராசலஸ்த தேவரை ராமாபின்னனாக உபாஸனை செய்தார் என்று நினைக்க வேண்டும். பிறகு, மேற்கு புறம் இருந்த ப்ராண தேவரையும், வெளிப்புறத்தில் இருந்த ருத்ரதேவரையும் கூட தவம் செய்து மகிழ்ச்சிப்படுத்தினார்.

**க3ங்கா3ம் கதா3சித3க4ஸங்கா3பஹாரக விஹங்கா3தி4பத்4வஜவரோ**
**ஸங்கா3வதி4ப்லுத தரங்கா3ன் த3த3ர்ஶ ப4வப4ங்கா3ம் ஜனை:**
**பரிவ்ருத: |**

**துங்கோ3பவாஸவ்ரத ர3ங்கா3தி4ப: ஸுஜனஸங்கீ3**
**ஹரேர்கு3ணக3ணான்**
**ஸங்கீ3ததோ கத2யத3ங்கீ3சகார ம்ருது3லாங்கீ3 ரமா ஸுத இதி ||7**

கதாசித் – ஒரு முறை; ஜனை: – மக்கள் கூட்டத்தினால்; பரிவ்ருத: – கூடியவராகி; அகஸங்காபஹாரக – பாவங்களை அழிப்பதான; விஹங்காதிபத்வஜவர – கருடனே வாகனமாக கொண்ட நாராயணனின்; உத்ஸங்காவதி – துடை வரை; ப்லுததரங்காம் – பாய்ந்து வரும் அலைகளைப் போல அழகாக இருப்பதான; பவபங்காம் – ஸம்ஸார துன்பங்களை அழிப்பதான; கங்காம் – பாகீரதியை; ததர்ஷ – கண்டனர்; துங்கோபவாஸவ்ரத – கடினமான (சிறந்ததான) பல காலம் செய்த உபவாஸ விரதத்தினால் மகிழ்ந்தவனான; ரங்காதிப: – ஸ்ரீரங்க க்ஷேத்ரவாஸி பத்னனாப ஸ்வாமி; ஸுஜனஸங்கீ – ஸஜ்ஜனர்களின் ஸங்கம் உள்ளவர்கள்; ஹரே: – ஸ்ரீஹரியின்; குணகணான் – குணங்களை; ஸங்கீதத: – ஸுளாதி, பத்யங்களை இயற்றியதன் மூலம்; அகதயத் – கொண்டாடினர்; ஆகையால், இவரை, ம்ருதுலாங்கீ ரமா – ஸ்ரீரமாதேவி; ஸுத இதி – மகன் என்று; அங்கீசகார – ஏற்றுக் கொண்டாள்.

இதே க்ஷேத்திரத்தில், பாகீரதி ப்ரத்யட்சம் ஆனது, மூன்று ஆண்டுகள் வரை உபவாசத்தினால் மலையில் தவம் செய்தது, அனேக ஸுளாதிகளை இயற்றியது, மற்றும் கனவில் ஸ்ரீலட்சுமிதேவியர் தரிசனம் அளித்தது ஆகிய தகவல்கள் இந்த பத்யத்தில் வந்துள்ளது.

ஒரு நாள், ஸஜ்ஜனர்களுடன் கூடி, பாவங்களை அழிப்பதற்காக வும், கருட வாகனனான ஸ்ரீகிரீஷாசலபதியின் உத்தம துடைகளின் வரை பாய்ந்து கொண்டிருக்கும் அலைகளைப் போல அழகானவள் ஆன, ஸஜ்ஜனர்களின் ஸம்ஸாராதி கஷ்டங்களை அழிப்பவளான, பாகீரதியை தேவாலயத்திலேயே அனைவரும் தரிசனம் செய்தனர்.

**ஸ்ரீராக4வேந்த்3ர கு3ருமாராத்4ய மாயிதி3திஜாரிம் ததீ3யகருணா**
**தா4ரோனுபூ4ய ஸுக2ஸாரம் கிரீடிரத2பா4ரம் வஹந்தமத3த4த் |**
**ஸ்ரீராமவத் க2லகுடா2ரோபனீதி க்ருதிமாராத்3விதா4ய ஸூயஶோ**
**தூ3ரங்க3தோ பு4வி த3தா4ராத2 நாகி பரிவாரஸ்துதோऽயமப4வத் ||8**

மாயிதிரிஜாரிம் – மாயாவாதிகள் என்னும் தைத்யர்களுக்கு எதிரிகளான; ஸ்ரீராகவேந்திர குரும் – மந்திராலய நிவாஸியான ஸ்ரீராகவேந்திர குருகளை; ஆராத்ய – சேவை செய்து; ததீயகருணாதார: – அவருடைய அருளுக்கு பாத்திரராகி; ஸுகஸாரம் – அனைத்து சுக போகங்களையும்; அனுபூய – அனுபவித்து; கிரீடரதபாரம் – அர்ஜுனனின் ரதத்தின் ஸாரத்யத்தை; வஹந்தம் – வகித்த ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமியை; அததத் – பிரதிஷ்டை செய்தார்; அத – பிறகு; ஸ்ரீராமவத் – ஸ்ரீராமசந்திர ஸ்வாமியைப் போல; கல – துர்ஜனர்களுக்கு; குடார – கோடலியைப் போன்றவரான தன் பேரனான விஜயராயரின்; உபநீதி க்ருதிம் – உபநயன காரியத்தை; ஆராத் – மிக விரைவில்; விதாய – செய்து; ஸுயஷ: – மிகச்சிறந்த புகழினை; ததார – பெற்றார். அத – பிறகு; அயம் – இந்த குருகள்; புவி – பூமியிலிருந்து; தூரங்கத: – விலகியிருந்தவராக; நாகி – ஸ்வர்க்கத்தில்; பரிவாரஸ்துத: அபவத் – தேவதைகள் என்னும் குடும்பத்தினருடன் வணங்கப்பட்டார்.

ஸ்ரீதாஸர், ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் ஆணைப்படி, மந்திராலயத்திற்குச் சென்று, அவருக்கு சேவை செய்து, அவரின் அருளைப் பெற்று, திரும்பி வந்து, ஸ்ரீபார்த்த ஸாரதியை நிறுவி, தம் பேரனான விஜயராயரின் உபநயனம் செய்து, தம் புகழினை வளர்த்துக் கொண்டார். பிறகு, தம் இருப்பிடமான ஸ்வர்க்கத்திற்குச் சென்று, தேவதைகளின் குடும்பத்தினரால் வணங்கப்பட்டார்.

மாயாவாதிகள் என்னும் தைத்யர்களுக்கு எதிரிகளான ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளை ஆராதனை செய்து, கருணா

பாத்திரர் ஆகி, பூமியில் அனைத்து சிறந்த சுகங்களையும் அனுபவித்து, பிறகு, அர்ஜுனனின் ரதத்தின் ஸாரத்யத்தையும் வகித்த பார்த்தஸாரதி ஸ்வாமியை ப்ரதிஷ்டை செய்தார். துர்வாதிகளுக்கு கோடலி போன்றவரான ஸ்ரீராமசந்திர ஸ்வாமியைப் போல ஒளிர்பவரான தம் பேரனான விஜயராயரின் உபநயனத்தை மிகவும் சீக்கிரமாக செய்து, அபாரமான புகழினைப் பெற்றார். பிறகு தம் இருப்பிடமான ஸ்வர்க்கத்திற்குச் சென்று, தேவதைகளின் குடும்பத்தினரால் வணங்கப்பட்டார். ஸ்ரீதாஸர் ஸ்வர்க்கஸ்தர் ஆன 13ம் நாளில், இவரது இரண்டாம் மனைவி ஒரு குழந்தையை ஈன்றெடுத்து, அவரும் அந்தக் குழந்தையுடன் ஸ்வர்க்கவாஸி ஆனார்.

இவ்வாறாக இந்த கிருதியை முடித்து, அடுத்து பல ஸ்ருதியை சொல்கிறார்.

**ஸ்ரீஶேஷவர்ய ஹரிதா[3]ஸாக்[3]ரணேஶ்சரித மாஶம்ஸிதம்**
**யலமளௌ**
**வாஸஸ்ய விட்டலக்ருதீஶஸ்ய பூர்ணகருணாஶாவதாஹ்ய**
**ஹரக: |**
**ஸ்ரீஸ்ரீனிவாஸ ஸுகவீஶேன பாட[2]மனு மேஶோ த[3]தா[3]தி**
**ஸுஸுதம்**
**வாஸோ த[4]னம் ச ஸுயஶ: ஶோபனம் ஸுக[2]மஶேஷ: ஶ்ருதிஸ்ம்ருதிகதிம் ||9**

யலமளௌ – யளமேலு கிராமத்தில் வசிப்பவரான; விட்டல க்ருதீஷஸ்ய – விட்டலாசார்யர் என்னும் பண்டித ஸ்ரேஷ்டரின்; அஹரஹ: – எப்போதும்; பூர்ணகருணாஷாவதா – பூர்ணகருணைக்கு பாத்திரரான; ஸ்ரீ – டங்கஸாலி என்னும் வேறு பெயர் கொண்ட; ஸ்ரீனிவாஸ ஸுகவேஷேன – ஸ்ரீனிவாஸ என்னும் கவிஸ்ரேஷ்டரால்; ஸ்ரீஶேஷவர்ய ஹரிதாஸாக்ரணே: – ஹரிதாஸர்களில் சிறந்தவரான ஸ்ரீஶேஷதாஸர் என்னும் ஹரிதாஸரின்; சரிதம் – ஸச்சரித்திரத்தை; ஆஷம்ஸிதம் – சொல்லப்பட்டுள்ளது. இந்த

சரித்திரத்தின் பாடவனு - பாராயணத்தை; மேஷ: - பகவந்தன்; ஸுஸுதம் - சிறந்த ஸந்தானம்; வாஸோ தனம் ச - வஸ்த்ர, தன, தான்யாதி செல்வங்களை; ஸுயஷ: - புகழினையும்; ஷோபனம் ஸுகம் - ஐஹிக ஸுகபோகத்தை கொடுப்பதோடு மட்டுமல்லாமல்; அஶேஷ ஷ்ருதிஸ்ம்ருதிகதம் - அபாரமான ஸ்ருதி ஸம்மதமான பகவத் விஷயக ஞான செல்வத்தையும்; ததாதி - கொடுக்கிறான்.

யளமேலி கிராமத்தவரான விட்டலாசார்யர் என்னும் பண்டித ஸ்ரேஷ்டரின் பூர்ண அந்த:கருணா பாத்திரரான, தொடர்ந்து வளர்வதான செல்வம் என்னும் லட்சணத்தால்

டங்கஸாலெ என்னும் பெயர் கொண்ட ஸ்ரீனிவாஸ என்னும் கவிஞரால் ஸ்ரீஶேஷதாஸர் என்னும் ஹரிதாஸரில் சிறந்தவரைப் பற்றி சொல்லப்பட்டுள்ளது. இந்த அஷ்டகத்தை படிப்பவர்களுக்கு, ஸந்தான பாக்கியம், செல்வம், வஸ்த்ரம், வாகனாதிகள், புகழ் ஆகியவற்றை ஐஹிகத்தில் கொடுப்பதோடு மட்டுமல்லாமல், பாரத்ரிகமான அபாரமான ஸ்ம்ருதி ஸம்மதமான ஞானத்தையும், அத்யந்த சுகத்தையும் மற்றும் பகவத் ஸம்ஸ்பர்சனத்தால் வருவதான அந்த:சுகத்தையும் அடைகிறான். அதாவது, அபரோக்ஷ ஞானம் பிறக்கிறது என்று அர்த்தம்.

துர்வாஸ க்ஷேத்திரமான ஷிவமொக்காவில் ஸ்ரீமத் அக்ஷோப்ய தீர்த்த மடத்தின் பீடாதீஷரான ஸ்ரீரகுதாந்த தீர்த்த யதிகளால் இயற்றப்பட்டது. மத்வாந்தர்கத ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***